ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 38

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| 4 ஸம் | பிப்ரவரிமீ 1952 கரஹு தைமீ | 1 இதழ் |
|---|---|---|

# எம்பெருமானாரும்-சரணாகதிகத்யமும்.

1. எம்பெருமானாருளிச் செய்த சரணாகதிகத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம் என்கிற தனித்தனி ப்ரபந்தங்களான மூன்றையும் சேர்த்து கத்யத்ரயமென்று வழங்கி வருகிறோம். கத்யத்ரயமென்கிற இப்பெயர் ஸ்வாமி தாமே இட்டருளினதென்று பலர் மயங்கி யிருப்பதுண்டு. உண்மையதுவன்று. சரணாகதி கத்யத்தை ப்ருது கத்யமென்றும், ஸ்ரீரங்க கத்யத்தை மித கத்யமென்றும் வழங்குவதுண்டு. இது நிற்க.

2. இந்த கத்யத்ரயம் திருவரங்கம் பெரிய கோயிலில் பங்குனி யுத்தரத்திருநாளினன்று ஸ்ரீரங்கநாதனும் ஸ்ரீரங்கநாயகியுமான சேர்த்தியிலே திருவவதரித்ததென்று ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் சொல்லிப்போருவதுண்டு. அதாவது ஸன்னிதியினுள்ளே பெரிய திருவோலக்கத்திலே திருவவதரித்ததாகச் சொல்லுவதாம். சரணாகதி கத்யம் மாத்திரமே அப்படித் திருவவதரித்தது என்பாரும், ஸ்ரீ வைகுண்ட கத்யம் தவிர மற்ற இரண்டு கத்யங்களுமே அப்படி திருவவதரித்தன என்பாருமுளர். இதைப்பற்றிப் பூருவாசாரியர்கள் யாரும் வ்யக்தமாக எழுதி வைத்திருப்பதாகத் தெரியவில்லை.

3. சரணாகதிகத்யத்திற்கு மூன்று வியாக்கியானங்கள் அவதரித்துள்ளன. பெரியவாச்சான்பிள்ளையதும், ச்ருத ப்ரகாசிகா சார்யருடையதும், வேதாந்த தேசிகனுடையதும். இவற்றுள், ச்ருத ப்ரகாசிகாசார்யருடைய வியாக்கியானத்தில் "உபாயோபேயபரம் த்வயம் விசதீக்ரியதே" என்று இவ்வளவே யுள்ளது. தேசிகனுடைய வியாக்யானத்திலே சிறிது விசதீகரண முள்ளது. அதாவது "ஊத்ரூஹ ஹவாநு ஹாஷ்யகாரஃ ஸ்ஊா ஆய-ஃஸ்ஸ ஃஹாயா மத அயஃவ அநெந ஸ்யஃ நஃஷ்ஃதம் ந்யாஸாவஃவிஃயாவிஶேஷம் ஸா ந-ஃபம்யிஸம்ஜிஜீவிஷயா யஶாவகஃவஃகாஶயநு....ஸ்ரீவஃவத்ஃதஃ ந-ஃஹ ஹவ-வஃகம் ஸஃஹ ஹவதா ஸஃஜாதம் ஸ்யம்ஃயொஜந ஸம்வாஃ விஶேஷம் நிபஃநாதி" என்றுள்ளது. இதன் கருத்தாவது—ஸ்வாமியெம்பெருமானார் தமக்கு ஸதாசார்ய பரம்பரையில் கிடைத்த த்வயத்தின் ப்ரவசன முகத்தாலே தாமனுஷ்டித்த ந்யாஸ வித்யையை தம்முடைய ஸம்பந்திகளும் உய்யுமாறு

உள்ளபடி வெளியிடா நின்றுகொண்டு பெரிய பிராட்டியை வணங்கி அவளுடைய அநுக்ஹத்தையும் பெற்று எம்பெருமானுக்கும் தமக்குமுண்டான ஸம்வாத விசேஷத்தை ஒரு ப்ரபந்தமாக இட்டருளுகிறார் என்பதாம். ஆக இந்த வியாக்கியானத்திலும் பகவதாலய ப்ரஸ்தாவமில்லை.

4. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற்காணும் ஸ்ரீஸூக்திகளாவன;—"இது தான் அவதரித்தபடி எங்ஙனேயென்னில், ஒரு திருவுத்தரத்திருநாளிலே பெருமாளும் நாச்சிமாரும் புறப்பட்டேறியருளாநிற்குமளவிலே எம்பெருமானார் எழுந்தருளித் திருவடி தொழா நின்றார்; அஸ்யாமவஸ்தாயாம், திருவுள்ளத்திலே ஸம்ஸாரபீதி நடையாட திருவடிகளிலே விழுந்து சரணம்புக்கு சரணம்புக்க ப்ரகாரத்துக்குப் பாசுரமிட்டபடி." என்று. நாளைக்கும் கோயிலில் பங்குனியுத்தரத்தன்று திருவோலக்கமாயிருந்து கத்யம் ஸேவித்து வருவது காண்கையாலே இதற்கு அநுகுணமாகவேயுள்ளது பேலேயுதாஹரித்த வியாக்கியான ஸ்ரீஸூக்தி. ஆனால் இதில் சில சங்கைகள் தோன்றக்கூடியதுண்டு. இதுவோ மிகவும் நீண்டதொரு கத்யப்ரபந்தம். ஓலையையும் எழுத்தாணியையும் கையிற்கொண்டு சென்று எழுதி வாசித்திருக்கவேண்டும். அல்லது, ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச்செய்ய கூரத்தாழ்வான் பட்டோலைகொண்டருளினார் என்னுமாபோலே, ஸ்வாமி கத்யமருளிச்செய்ய ஆழ்வானோ ஆண்டானோ எம்பாரோ யாரேனுமொருவர் பட்டோலைகொண்டிருக்கவேண்டும். அப்படி ஒரு ஐதிஹ்யமும் தெரியவரவில்லை. ஸ்வாமி திருக்கையினால் எழுதியதாகவாவதிருக்கட்டும், சிஷ்ய ஹஸ்தலிகிதமாகவாவது இருக்கட்டும். ஒருவர் எழுதாமல் ப்ரபந்தமாக அமையாதன்றோ. முன்னடியேயெழுதிவைத்தருளி திவ்யதம்பதிகளின் திருமுன்பே ஸேவித்தருளினாரா? ஸந்நிதியில் அர்த்தாநுஸந்தானத்தை மாநஸிகமாகச் செய்தருளி, மடத்திற்கெழுந்தருளியானபிறகு சப்தராசிகளைத் தொடுத்தாரா? என்றிப்படி விகல்பித்துக் கேட்கிறார்கள் பலர். இதை வம்பர்வினவென்று சொல்லிவிடமுடியாது.

5. ஸ்வாமி தமக்குப் பிராட்டி ப்ரதிவசனம் பண்ணினதாகவும் பெருமாளும் பலபல ப்ரதிவசனங்கள் பண்ணினதாகவும் இடையிடையே நிபந்திக்கப்பட்டிருக்கிறது. இந்த ப்ரதிவசனங்கள் ஸ்வாமி தாமாகவே யதேஷ்டமாகக் கல்பனைசெய்துகொண்டதென்று ஸாஹஸா சொல்லிவிடுதல் பொருந்தாது. இதைப்பற்றி தேசிகன் ஸாதித்தருளியிருப்பதாவது—"வ்ருதிவத் நாம்ஸஹஸ்ரம் ஶரணாக திவஶீக்ருத ஶரண்யாஶயம் விஶேஷஜ்ஞயநந நிப யந்த உதைதகெ" என்று. அதாவது, சரணாகதியினால் வசீகரிக்கப்பட்ட சரண்யனுடைய அபிப்ராய விசேஷத்தை ஒருவாறு ஊஹித்து ப்ரதிவசன பாகங்களை யிட்டுவைத்தாரென்கை.

சரணாகதியென்பது மாநஸிகாத்யவஸாய விசேஷமேயாதலாலும், அதற்கு நீண்ட காலம் அநபேக்ஷிதமாகையாலும், ஒரு நாழிகையவகாசமாவது வேண்டியிருக்குமதான கத்யாநுஸந்தாந காலம் முழுவதும் சரணாகத்யநுஷ்டான காலம் என்று சொல்லிவிடுதல் ஸாத்யமன்று. சங்கிப்பார்க்குப் பரமத்ருப்திகரமாகவோ கிஞ்சித் த்ருப்திகரமாகவோ ஒன்று சொல்லியேயாகவேண்டும். பஹுச்ருதர்களான மஹான்கள் நிஷ்கர்ஷிக்கத்தக்க விஷயத்திலே மிதஜ்ஞர்களான மாத்ருசர்கள் தலையிடுவதும் மனம்போனபடி யொன்றையெழுதி வைப்பதும் யுக்தமாகாது. இதைப்பற்றின நிஷ்கர்ஷபாரத்தைப் பெரியார்களுக்கு விட்டிடுவோம்.

6. *ஆனால் ஒரு விஷயம் நிச்சயமாகத் தெரிகின்றது. அதாவது, எம்பெருமானார் ஸ்ரீரங்கநாயகியையும் ஸ்ரீரங்கநாதனையும் ஏத்தியுகப்பித்தருளி பெறுதற்கரிய வொரு வரம்

பெற்றதாக. இதைப் பல ஆசாரியர்களும் பேசியுள்ளார்கள். ச்ருதப்ரகாசிகாசாரியர். தேசிகன், மணவாளமாமுனிகள் ஆகிய மூவரும் அருளிச்செய்திருப்பது காண்கிறோம். ச்ருதப்ரகாசிகாசார்யர் அருளிச் செய்திருப்பதாவது—ஊக்கமுடன் குறிக்கொண்மின். ஸ்வாமி முதன் முதலாக * பகவந்நாராயணபிமத........* என்று தொடங்கி அந்த சூர்ணையாலே பிராட்டி திருவடிகளிலே சரணம்புக்கார். எதற்காக வென்ன, * பாரமார்த்திக......என்று தொடங்கி * பகவச்சரணாரவிந்தசரணாகதி: யதாவஸ்திதா அவிரதா அஸ்து மே * என்றார். உடனே பிராட்டி ப்ரதிவசனமருளினதாக "அஸ்து தே; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" என்று இரண்டு வாக்யங்களிட்டருளியிருக்கிறார். இவ்விரண்டு வாக்யங்களில் அஸ்து தே என்கிற முதல் வாக்யமொன்றே போதும்; * தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே * என்கிற இரண்டாம் வாக்யம் அநபேக்ஷிதம் போல் தோற்றும். வ்யர்த்தமாக ஓரக்ஷரமும் இருக்கத் தகாதாகையால் இங்கே விசேஷமான கருத்து உள்ளதாக ச்ருதப்ரகாசிகாசார்யர் காட்டியருளுகிறார்; "ஸ்வஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம்" என்றருளிச்செய்துளர். அதாவது, 'அஸ்து தே' என்றவளவே போதுமாயிருக்க அதிகமாக வொரு வாக்யமிட்டதுமல்லாமல் அதில் "தயைவ ஸம்பத்ஸ்யதே" என்னுமளவே பர்யாப்தமாயிருக்க "ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" என்றும் சொல்லியிருக்கிறது. ஸர்வம் என்கைக்கு இங்கு என்ன ப்ரஸக்தியிருக்கிறது? ஆயினும், ஸர்வம் ஸம்பத்ஸ்யதே—எல்லாமும் நிறைவேறப் போகிறது என்று ப்ரதிவசனம் அவதரித்திருக்கையாலே "பேறு உமக்கு மாத்திரமன்று, உம்மோடு அவ்யவஹித ஸம்பந்தம் பெற்ற ஸாக்ஷாச்சிஷ்யர்களுக்கு மாத்திரமுமன்று; ஸம்பந்தி ஸம்பந்தி ஸம்பந்திகளென்னும் படியான பரம்பரா ஸம்பந்திகளுக்குமாகக் கடவது" என்றதாகத் தேறுகிறது—என்று ச்ருதப்ரகாசிகாசாரியர் விளக்கியருளினர். இதில் (ஸம்பந்தி நிஸ்தரணமபி) என்றாலே போதும். ஸாக்ஷாத் ஸம்பந்திகளும் பரம்பரா ஸம்பந்திகளுமான ஸகலவித ஸம்பந்திகளும் ஸம்பந்தி யென்ற வொரு சொல்லினாலேயே க்ரஹிக்கப்படலாமென்பதில் சாஸ்த்ரஜ்ஞர்கள் விவாதப் படமாட்டார்கள். ஆயினும், ஸாக்ஷாத் ஸம்பந்தம் மாத்திரமே தான் விவக்ஷிதமென்றும் பரம்பரா ஸம்பந்தம் விவக்ஷிதமாவதற்கு ப்ரஸக்தியில்லையென்றும் கால விசேஷத்திலே யாராவது ஒரு விவாதத்தைக் கிளப்பக் கூடுமென்று கருதியே ச்ருதப்ரகாசிகாசார்யர் "ஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தரணமபி" என்று ஸுஸ்பஷ்டமாக அருளிச்செய்துவைத்தார். இதைத் தழுவி மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் *காலத்ரயேபி* என்று தொடங்கியுள்ள ச்லோகத்தில் "க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர! பவச்ச்ரிதாநாம்" என்றருளிச் செய்தார்.

7. இவ்விஷயத்தை நாம் ஆர அமர விமர்சிக்க வேண்டியது அவச்யமாகிறது. எம்பெருமானார் கத்யமருளிச் செய்த பிறகே ப்ரபந்நராயினர் என்று சொல்லுவதற்கு ப்ரஸக்தியில்லை. பெரியநம்பி திருவடிகளில் ஆச்ரயித்தபோதே ப்ரபந்நராவாதலால். ப்ரபத்தி சாஸ்த்ரார்த்தங்களையும் ப்ரபத்தியின் பெருமைகளையும் ப்ரபந்நஸந்தானத்திற்கு சாச்வதமாக வெளியிட்டு வைக்க வேண்டியே இந்த ப்ரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளினார் என்றும், அதை ஒரு நன்னாளிலே திவ்யதம்பதிகளின் திருமுன்பே முதலிகளையெல்லாம் ஓலக்கமாக வைத்துத் தெண்டன் ஸமர்ப்பித்து விண்ணப்பஞ் செய்தருளினாரென்றும் சொல்லவேண்டியதாகிறது. இந்த விண்ணப்பங் கொண்டு தாமொரு ப்ரயோஜநம் பெற நினைந்திருந்தாரல்லர். நெடுநாளைக்கு முன்னமே நம்மாழ்வார் திருவவதரித்து தாம் சரணாகதி நிஷ்டரானபடியைத் திருவாய்மொழி முகத்தாலே வெளியிட்டதோடு நில்லாமல் "திருவேங்கடத்துக் கிவை பத்தும் பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரியவானுள் நிலாவுவரே" என்று அருளிச் செய்து வைத்திருக்கிறார். ஆழ்வார் ஒவ்வொரு பதிகத்திற்கும் பலச்ருதியிடுகிறார். "இப்பத்தும் வல்லவர் வைகுந்த மேறுவர்" என்றாற்போன்ற பல ச்ருதியை நாம் பல பதிகங்களின் முடிவிற்

காண்கிறோம். "பிடித்தார் பிடித்தார்" என்கிற இப்பலச்ருதியானது மற்று ஓரிடத்திலும் காணக் கிடைக்காமல் ஒரு பதிகத்தின் பலனாக மாத்திரமே அவதரித்துள்ளது. இதற்கு அடுத்த முன் பாசுரம் *அகலகில்லேனிறையு மென்று ...உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே* என்பது. தாமொருவர் சரணாகதரானதற்குப் பலன் தம் மொருவரிடத்திலே சுவறிப் போகாமல் தம்முடைய திவ்ய ஸூக்தியைப் பரிக்ரஹிக்கும் முகத்தாலே தம்மோடு ஸம்பந்தம் பெறுகிற ஸகல ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கலிலும் வெள்ளங் கோத்துப் பெருகும் என்பதைக் காட்டவேண்டியே இவ்விடத்தில் *பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரியவானுள் நிலாவு வரே* என்று இவ்விதமான பலச்ருதியை அமைத்தருளினர்.

8. ஆழ்வார் இவ்விதமான பலச்ருதிகொண்ட பாசுரத்தை அருளிச் செய்யவேயில்லை என்று வைத்துக்கொள்வோம். அப்போது அதிற்சொன்ன பலன் அஸ்மதாதிகளுக்குக் கிட்டுமா கிட்டாதா? என்று ஆராயுமளவில் கிட்டாதென்று ஒருவரும் உரைக்க முடியாது. 'இன்ன நாளில் மழை பெய்யும்' என்று பஞ்சாங்கத்தில் பிரசுரிப்பதைக் கண்டா மழை பெய்கிறது? இல்லையே. *படந் த்விஜோ வாக்ருஷபத்வமீயாத்* இத்யாதியால் சொல்லப்பட்ட எந்த பலனும் பலச்ருதியான ச்லோகத்தையோ பாசுரத்தையோ எதிர்பாராமல் தன்னடையே விளைந்துதீரும். அதை திவ்ய சக்ஷுஷ்மான்களான பெரியார் நூல்களிலே பொறித்து வைப்பதானது நம் போல்வார்க்கும் தெரிவதற்காகவே யன்றி மற்றொன்றுக்காகவன்று.

9. ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார் பேறு பெற்றாரென்னுமிடம் * அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச்சடகோபன் * என்ற பாசுரத்தினால் நிஸ்ஸந்தேஹமாகத் தெரிந்திருக்கிறது. அவருடைய திருவாய்மொழியிலே அந்வய முள்ளவர்களுக்கும் அந்தப் பேறு கிடைத்தே தீரு மென்பதும், திருவாய்மொழியில் அந்வயமில்லாதார்க்குப் பேறு கிடையா தென்பதும் தேசிகனுடைய திவ்ய ஸூக்தியால் ஜகத் ப்ரஸித்தமாகியிருக்கிறது. எங்ஙனே யென்னில், பாதுகாஸஹஸ்ரத்தில் ஸமாக்க்யாபத்ததியில் இரண்டாவது சுலோகம்—

* த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி லக்ஷ்மீரமணாய ரோசயிஷ்யந்,

தருவமாவிசதிஸ்ம பாதுகாத்மா சடகோபஸ் ஸ்வயமேவ மாநநீய:. *

என்பது. இதன் கருத்து உலகமறிந்ததே. பாதுகாஸஹஸ்ரத்தில் மிகச்சிறந்த ரத்னமென்னும்படியான ச்லோகங்கள் பலவுண்டு; அவற்றுள் இது தலைமைபெற்றது. இந்தச்லோகத்தில் சொல்லுகிற அர்த்தம் ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி நம்பிள்ளையளவாகவுள்ள ஆசார்யர்கள் அருளிச்செய்து கொண்டிருந்ததே; ஆனால் அவர்கள் ச்லோகபத்தமாக்கி வைக்கவில்லை. ஸ்வாமி தேசிகன் ச்லோகபத்தமாக்கிவைத்தார் என்பதுவே விசேஷம். இதன் கருத்து யாதெனில்;[த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி இத்யாதி.] திருவாய்மொழியில் ஏதேனுமொரு படி அந்வயமில்லாதவர்களைக் கைக்கொள்வதில்லையென்று எம்பெருமான் உறுதிகொண்டிருப்பவனும். ஆனால் உலகில் தமிழ்ப்பாஷை நடையாடாத நாடுகளிற் பிறந்தவர்கள் எண்ணிறந்தவர்களாதலாலும் அவர்களுக்குத்திருவாய்மொழியில் அந்வயம் ஸம்பவிக்க யோக்யதையில்லாமையாலும் அவர்களெல்லாரும் பகவத்ஸ்வீகாரத்திற்கு இலக்கன்றிக்கே யொழியவேண்டி வருகிறதே; இதற்கு என்செய்வது! என்று பார்த்த நம்மாழ்வார், பகவதாலயங்களில் எம்பெருமானுடைய பாதுகையிலேதாம் ஆவேசித்து [ஸ்ரீசடகோபனென்கிற பெயரைப் பாதுகைக்கு இடும்படியாகச் செய்து என்றபடி.] வஸிஷ்டர் தொடங்கி நாபிதராஜகாதிபர்யந்தமாக வாசியின்றிக்கே யாவர்க்கும் ஸ்வாந்வயத்தையுண்டாக்கி, திருவாய்மொழியிலே ஸாக்ஷாத்தாக அந்வயமில்லாமற்போனாலும் அதற்கு வக்தாவான ஆழ்வாரோடே ஒருபடி

அந்வயமுண்டாகப்பெற்ற இவர்களை நாம் கைக்கொள்ளலாமென்று எம்பெருமான் திருவுள்ளம்பற்றுமாறு செய்துவிட்டார்! ஆழ்வாருடைய இக்கருணை மிகவும் கொண்டாடத்தக்கது என்பதாம்.

10. இந்த ச்லோகத்தில் த்ருவம் என்பது ப்ரயோகிக்கப்பட்டிருக்கையாலே *மந்யே சங்கே த்ருவம் ப்ராய: நூநமித்யேவமாதிபி:, உத்ப்ரேக்ஷா வ்யஜ்யதே சப்தை:* என்ற சாஸ்த்ரப்படி இது உத்ப்ரேக்ஷையாகக்கூடுமேயல்லது பரமார்த்தமாகக்கூடியதன்று என்று சிலர் நினைக்கக்கூடும். அப்படியே நினைத்தாலும் எந்த அம்சத்தில் உத்ப்ரேக்ஷையாக நினைக்கலாமென்னில், ஸ்ரீசடகோபனென்று பேர்பெற்ற பாதுகையின் அந்வயமுடையாரெல்லாரையும் எம்பெருமான் கைக்கொள்ளுகிறானென்கிற அம்சத்தில் மாத்திரம் நினைக்கலாம். திருவாய்மொழியில் அந்வயமில்லாதார்க்கு எம்பெருமானுடைய ஸ்வீகாரம் நேராதென்று பூர்வார்த்தத்தினால் பெறுவித்த அர்த்தம் பரமார்த்தமேயொழிய வேறன்று. ஆகவே அருளிச்செயல் ஸம்பந்தமுடையாரெல்லார்க்கும் பேற்றில் ஸந்தேஹமில்லாமையாலே எம்பெருமானார் அபூர்வமாகத் தாமொரு பேறு பெறுதற்காக சரணாகதிகத்யமருளிச் செய்தாரென்று யாரும் நினைக்க ப்ரஸக்தியில்லை. நம்போன்றவர்கள் ஆசார்யனை யாச்ரயிப்பதோ த்வயாநுஸந்தானம் பண்ணுவதோ மற்றும் பல நல்லகாரியங்களைச் செய்வதோ எதுவும் பேற்றுக்கு ஸாதனமென்று எண்ணியன்று. *வனத்திடரை ஏரியாம்வண்ணமியற்றுமிதுவல்லால் மாரி யார் பெய்கிற்பார் மற்று* என்று பூதத்தாழ்வாருளிச்செய்த ரீதியிலே நம்மை நாம் செவ்வைப்படுத்தி வைத்துக் கொள்வது நலம் என்கிற கருத்தினாலேயே. நாம் ஸ்ரீ வைஷ்ணவஸந்தானத்திலே பிறந்து 'ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்' என்று அநுஸந்திக்கும் பாக்கியம்பெற்றிருப்பதொன்றே அவ்யபிசரிதமாக நமக்குப் பேறுபெறுவிக்குமென்று பன்முறையும் கேட்டிருந்ததுண்டு.

11. * விகதவிவிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே * (ஸ்ரீபாஷ்யே) என்றவிடத்து ச்ருதப்ரகாசிகாசார்யரும் தேசிகனும் (தத்வடீகாயாம்) நிஷ்கர்ஷித்தபடி நம்போல்வார்க்கே பேறுதப்பாதென்றிருக்கும்போது எம்பெருமானார்க்கு கிம்புந:? அவர் ஒரு பேறுகருதி கத்யமருளிச்செய்தாரல்லர். ஆனாலும் அந்த ஸமயத்தில் ஸ்வாமிக்கு ஒரு விசேஷாநுக்ரஹலாபம் ஸ்ரீரங்கநாதனிடமிருந்து கிடைத்திருப்பதாக ஸுஸ்பஷ்டமான தேசிக ஸூக்தியினால் தெரியவருகிறது. (அதாவது,) ந்யாஸதிலகத்தில் * உக்த்யா தநஞ்ஜய * இத்யாதிச்லோகத்தில் "லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம் ச்ருத்வா வரம்" என்கிறாரே, இது வொருபெரிய நிதியான வார்த்தை. ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானார்க்கு ஒரு வரம் கொடுத்ததாக இதில் சொல்லப்பட்டிருக்கிறது. அநுக்ரஹம் செய்தான், அருள்செய்தான் என்று சொல்லியிருந்தால் அது ஸர்வஸாதாரண வார்த்தையாக நினைக்கத்தகும். விதீர்ணம் வரம் ச்ருத்வா என்று சொல்லியிருக்கையாலே கர்ண பரம்பரையினாலேயே கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டிய ஒருவரம் ஸ்ரீ ரங்கநாதன் எம்பெருமானார்க்குக் கொடுத்திருப்பதாக நன்கு தெரியவருகிறது. ஆப்ததமரான ஆசார்ய ஸார்வபௌமர் ஸந்தேஹத்திற்கிடமில்லாதபடி சொல்லிவைத்திருக்க, அதற்கு அர்த்தமே கிடையாதென்று உதறிவிடுவது உரியதன்று. வேறு எந்த ஆசார்யர்க்குமில்லாத ஒரு பெருமை ஸ்வாமி எம்பெருமானார்க்கு விசேஷித்துச் சொல்லப்பட்டு வருகிறது. அதுதான் ஸ்ரீரங்கநாதன் கொடுத்த வரமாயிருக்கவேண்டும். அந்தப்பெருமை யாதெனில்; அதை ப்ரபலப்ரமாணத்தோடு தெரிவிக்கிறேன் கேண்மின்.

12. தேசிகனருளிய ந்யாய பரிசுத்தியின் தொடக்கத்தில் எம்பெருமானாரைப் பற்றிப் பணித்த மங்கள ச்லோகத்தில்,

" 𑌪𑌤𑍍𑌯𑍁𑌃 𑌸𑌂𑌯𑌮𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌤𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑍋𑌟𑍀𑌰𑌯𑍋𑌃

𑌸𑌂𑌬𑌂𑌧𑍇𑌨 𑌸𑌮𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑌵𑌿𑌭𑌵𑌾𑌨𑍍 𑌧𑌨𑍍𑌯𑌾𑌨𑍍 𑌤𑌥𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑍍 𑌗𑍁𑌰𑍂𑌨𑍍 "

பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாதகோடீரயோ:

ஸம்பந்தேந ஸமித்த்யமாநவிபவாந் தந்யாந் ததாந்யாந் குரூந்]

என்றுள்ளது. இதன் பொருளாவது, ஸம்யமிநாம் பத்யு:—எதிராசரான எம்பெருமானாருடைய, சரணௌ—திருவடிகளை, ப்ரணம்ய—வணங்கியும், தத்பாதகோடீரயோ: ஸம்பந்தேந—அந்த எம்பெருமானாருடைய திருவடியென்ன திருமுடியென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினால், ஸமித்த்யமாநவிபவாந்— பெருமை பெற்றவர்களாய், தந்யாந்—க்ருதார்த்தர்களான, குரூந் ப்ரணம்ய—ஆசார்யர்களை வணங்கியும்........ந்யாய பரிசுத்தியென்கிற இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது—என்கை. இதில் *தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந* என்றது உயிரான ஸ்ரீஸூக்தி. கோடீரமென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் போல முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம் உத்தாரகமென்று இதனால் நன்கு காட்டப்பட்டதாயிற்று. கூரத்தாழ்வான் விஷயமாக பட்டர் அருளிச்செய்ததும் ஸுப்ரஸித்தமுமான * அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வமாச்ரித்ய பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு:, ஸோயம் ராமாநுஜமுநிரபி * என்ற ச்லோகத்தில் முக்திமாபு: என்றதற்குப் பர்யாயமாகவே ஸமித்த்யமாநவிபவாந் என்று இங்கு அருளிச்செய்தது.

13. "பிற்பட்டவர்களுக்கு ஸ்வாமி திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது நெஞ்சில் நன்கு பொருந்துகின்றது. முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமுண்டாயிற்றென்றால் அந்த வார்த்தை அந்வயிக்கவே இல்லையே; ஸ்ரீமந் நாதமுனிகள் உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிபோல்வார்தானே ஸ்வாமிக்கு முற்பட்டவர்கள்; அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச் சேர்ந்தவர்களன்றோ; அவர்களது காலத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு. இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது அஸம்பாவிதமான வார்த்தையாக இருக்கின்றதே!" என்று சிலர் சங்கிக்கக் கூடும். இதற்குச் சொல்லுகிறோம்; சாஸ்த்ரங்களில் உத்தம புருஷர்களின் பிரபாவங்களைச் சொல்லுமிடத்து * தச பூர்வாந் தச அபராந்.......புநாதி * என்றும் * ஸப்த ஸப்த ச ஸப்த ச * என்றும் சொல்லப்பட்டிருப்பது ப்ரஸித்தம். ஒரு வம்சத்தில் ஒரு மஹநீய புருஷன் தோன்றினால் அவனுடைய பெருமேன்மையினால் முன்னே பல தலைமுறையாரும் பின்னே பல தலைமுறையாரும் வாழ்ச்சி பெறுவதாகச் சொல்லப்படுகிறது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் *செடியார் நோய்களெல்லாந் துறந்து எமர் கீழ்மே லெழுபிறப்பும் விடியா வெந்நரகத்து என்றுஞ் சேர்தல்மாறினரே * என்றும் * கேசவன்தமர் கீழ்மே லெமரேழெழுபிறப்பும் மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா* என்றுமருளிச்செய்தார். ஆகவே முற்பட்டவர்களையும் ஸத்கதி பெறுவிக்கும் பெருமை பிற்பட்டவர்களுக்கு விளைகின்றதென்பது சாஸ்த்ர ஸம்மதமே யென்றுணர்க.

14. முற்பட்டவர்களின் விஷயம் எப்படியாவதிருக்கட்டும்; பிற்பட்டவர்களுக்கு ஸ்வ ஸம்பந்தத்தினால் ஸத்கதிபெறுவிப்பது தவறுதென்பதே இங்கு முக்கியமாக விவக்ஷிதம். நம்முடைய ஸதாசார்யபரம்பரையில் இப்பெருமை எம்பெருமானார்க்கு அஸாதாரணமாயிருக்கும். மற்று எந்த ஆசார்யரைப் பற்றியும் இப்படிப்பட்ட பேச்சு இல்லை.

15. இப்பெருமையை ஸ்ரீரங்கநாதனே வரப்ரஸாதமாகத் தந்தருளினன். அதைத்தான் *ச்ருத்வா வரம் ததநுபந்தமதாவலிப்தே* என்ற ந்யாஸதிலக ச்லோகத்தினால் ஸ்வாமி வெளியிட்டருளினார். இதில் ஒவ்வொரு பதமும் உயிரானது. ச்ருத்வா என்பது முதற்பதம். இவ்விஷயம் கர்ணபரம்பரையினால் தமக்கு எட்டியதாக அருளிச்செய்தபடி. வரம் என்பது இரண்டாவது பதம். இந்த வரம் எப்படிப்பட்டது என்கிற விசாரமொன்றினாலேயே முடிவு பெறத்தக்கது இது. உடனே ததநுபந்தமதாவலிப்தே என்று சொல்லியிருக்கையாலே எம்பெருமானாருடைய அநுபந்திகளுக்கும் மோக்ஷமுண்டென்று முற்சொன்ன வர சரீரத்தில் அடங்கியிருப்பதாக நன்கு புலனாகின்றது. இல்லையேல் இங்கு வரம் ச்ருத்வா என்றவுடனே 'ததநுபந்தமதாவலிப்தே' என்றவிது பொருளற்றதாகும்.

16. ஸ்ரீரங்கநாதன் கொடுத்த வரம் எப்படிப்பட்டதென்று இனி ஆராய்வோம். பெரிய திருமொழி (3—7—3) *அஞ்சுவன் வெஞ்சொல் பாட்டின் வியாக்கியானத்திலே "துடுப்பிருக்கக் கைவேகவேணுமோ வென்று கிடாம்பியாச்சான் பணித்ததாக" ஒரு விஷயம் அருளிச்செய்யப்படுகிறது. பூருவர்களே நிர்ணயித்துப் பேசியுள்ள விஷயத்தில் இன்று நாம் வீணாக ஆராய்ச்சிசெய்து சிரமப்படுவது எதுக்கு? என்பதே 'துடுப்பிருக்கக் கைவேகவேணுமோ?' என்ற நியாயத்தின் கருத்து. அதுபோல, ஸ்ரீராமாநுஜர்க்கு ஸ்ரீரங்கநாதன் கொடுத்தருளின வரம் இப்படிப்பட்டதென்பதை முன்னோர்களே நன்கு வியாக்கியானம் பண்ணியிருக்கையாலே நாமிருந்து சிரமப்பட வேண்டாவே.

17. தேசிகனுடைய திருக்குமாரரான நயினாராசார்யரும், கௌசிக—ஸ்ரீபாஷ்ய ஸ்ரீநிவாஸாசார்யருமாகிய இருவர் ந்யாஸதிலகத்திற்கு ஸம்ஸ்க்ருதபாஷையில் (இரண்டு) வியாக்கியானமருளிச் செய்துள்ளார்கள். இதை 45-வருஷங்களுக்கு முன்பு திருக்குடந்தையில் தேசிக ஸம்ப்ரதாய விவர்த்திநீஸபையார் அச்சிட்டு வைத்திருக்கிறார்கள். அதில் நயினாராசார்யருடைய வியாக்கியானத்தில்,

"[illegible]" என்றுள்ளது. அதற்கடுத்த வியாக்கியானத்தில்,

"[illegible]"

என்று எழுதியுள்ளது. இந்த வாக்யமானது நயினாராசாரியருடைய வியாக்கியானத்திலேயேயிருந்ததாகவும், இதை அடியோடே யெடுத்துவிடவேணுமென்று சிலர் பார்த்தும் அந்த ஸபையார் இணங்காமையாலே மற்றொருவருடைய வியாக்கியானத்திலே சேர்த்து அச்சிட்டதாகவும் ஒரு ப்ரஸித்தியுண்டு. ஆனால் இந்த விசாரம் வேண்டா. எந்த வியாக்கியானத்தில் இந்த பங்க்தி அச்சிடப்பட்டிருக்கிறதோ, அந்த வியாக்கியான மிட்டவரும் ப்ராசீநரே; ப்ராமாணிகரென்று அத்தலையில் கொள்ளப்பட்டவரே. அவர் விளக்கியிருப்பதேபோதும்.

18. மேலே குறித்த ஸம்ஸ்க்ருத பங்க்தியின் பொருளாவது—"ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீராமாநுஜர்க்கு அளித்த வரம் எப்படிப்பட்டதென்னில்; இப்படிப்பட்டது;—ஸ்ரீராமாநுஜரே! நீர் வேதாந்த சாஸ்த்ர ரஹஸ்யமான ப்ரபத்தி சாஸ்த்ரத்தின் பொருளை நிலைநிறுத்தியது காரண

மாக [உமக்கு இந்த வரம் தருகிறேன்;] என்பீர் குறையற ப்ரபந்நராயிருக்கிற உம்முடைய அபிமானத்திலும் ஸித்தாந்தத்திலும் ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ யார் யார் சேர்ந்திருக்கிறார்களோ அவர்களெல்லாரும் ஏதத் தேஹாவஸாநத்திலேயே உம்முடைய ஸம்பந்தி ஸம்பந்தத்தினாலேயே முக்தியடைவார்களாக. என்று இப்படியொரு வரமளிக்கப்பட்டதாக யதார்த்தவாதிகளான ஆப்தர்கள் அன்று தொடங்கி இன்று வரையில் சொல்லிவரக் கேட்டு வருகிறோம்'' என்பதே:

19. 'இப்படியன்று வரப்ரதானம், வேறுவிதமாக' என்று சொல்வதற்கில்லை. அப்படியொருவர் சொன்னால் அது ஆப்தவாக்யமாகாது. *ஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தரணமபி ஸர்வ சப்தாபிப்ரேதம்* என்ற ச்ருத ப்ரகாசிகாசார்ய ஸ்ரீஸூக்தியினாலும் வரப்ரதானம் விசதீகரிக்கப்பட்டே யுள்ளது. கத்யபாஷ்யத்தில் ''விபீஷண ஸஹாகத ராக்ஷஸங்யாயே'' என்று ஸ்வாமி ஸாதித்திருக்கையாலே ஸாக்ஷாத் ஸம்பந்திகளுக்குத்தான் பேறு உண்டு என்று சொல்லலாகாதோ வென்னில்; ஆகாது; கேண்மின்; *சதுர்ப்பிஸ் ஸஹ ராக்ஷஸை:* என்னப்பட்ட விபீஷண ஸஹாகதர்களிடத்திலே இந்த ஸஹாகதத்வமொன்று தவிர வேறு ஒருவகையான பற்றுசும் கண்டதில்லை. 'வ்யாஜமென்றோ உபாயமென்றோ பேரிடத்தக்கதானதொன்று எந்த வ்யக்திகளிடத்தில் இல்லையோ அந்த வ்யக்திகளுக்குங் கூடவா பேறு கிடைத்துவிடும்?'' என்று சங்கிக்குமவர்களுக்குச் செவ்வனே ஸமாதானம் பிறப்பிக்கைக்காகவே விபீஷண ஸஹாகத ராக்ஷஸர்களை ஸ்வாமி யெடுத்துக் காட்டியருளினார். பலன் திண்ணமாகக் காணுமிடத்தை யன்றோ ப்ராமாணிகர்கள் எடுத்துக் காட்டுவது. விபீஷணனோடே பரம்பரா ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் பெருமாள் பலன் அளித்திருக்கலாமாயினும் அது ப்ரமாணாரூடமாகக் காணப் பெறாமையாலும், ப்ரமாண முகமாகத் தேறினதைக் காட்டினாலல்லது சங்கா கலுஷிதர்களுக்கு சித்த ஸமாதானம் பிறவாதாகையாலும் கண்ணழிவற்ற ப்ரமாண ஸித்தமான அது தன்னையே ஸ்வாமி எடுத்துக்காட்ட நேர்ந்தது. அது நிற்க.

20. எம்பெருமானை ''இருகரையுமழிக்கும் க்ருபா ப்ரவாஹமுடையவன்'' என்கிறார்கள். அந்த க்ருபாப்ரவாஹம் பெருகப்புக்கால், அது இவ்வளவுதான் செல்லும், அவ்வளவு செல்லாது என்றொரு நியந்த்ரணம் பண்ணவல்லாருண்டோ? 'ஒருவனுக்கு நிதி கிடைத்தது; அதிலுள்ள தெல்லாம் நவரத்னமே' என்று ஒருவர் சொன்னால் இதில் பிறர் அஸூயைப்படலாமேயல்லது ''இது எப்படி ஸம்பாவிதம்? அந்த நிதியில் பத்தெட்டுக் காசு இருக்கலாம்; நவரத்னங்களே நிரம்பி யிருக்குமோ?'' என்று ஒருவர் க்ஷேபிக்க இடமுண்டோ? ஸ்வாமி ராமாநுஜர்க்கு இப்படிப்பட்ட வரம் பெறுகையாகிற ஒப்புயர்வற்ற ப்ரபாவ முண்டாயிற்றென்றால்—இதை ப்ராமாணிகர்கள் எழுதிவைத்தால் க்ஷேபிக்க அதிகாரிகள் யார்?

21. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதிகாரிவிபாகாதிகாரத்தில்—''ஒரு மலையில் நின்றும் ஒரு மலையிலே தாவும் ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்களைப் போலே பாஷ்யகாரர் ஸம்ஸாராதிலங்கனம் பண்ண அவரோடுண்டான குடல்துவக்காலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டானருளிச் செய்த பாசுரம்''

என்றுள்ளது. இந்த ஸிம்ஹத்ருஷ்டாந்தத்தை விமர்சிப்போம். ஸிம்ஹத்தின் உடலிலே ஒரு ஜந்து இருந்தால் அது மலையைத்தாவுதற்குத் தானாக வொரு முயற்சி செய்யவேண்டா; ஸிம்ஹ சரீரத்தில் ஒட்டிக்கொண்டு கிடக்கை மாத்திரமே அதற்குப்போதும் என்பது இங்கே ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டுள்ளது. இதுபோல, உடையவருடைய திருமேனியின்மேல் ஆண்டான் போல்வார் ஏறியிருக்கவேணுமென்பதில்லை. ஏதேனுமொருபடி தத்ஸம்பந்தமிருந்தால் அவ்வளவே கொண்டு ஸம்ஸாராதிலங்கனம் பண்ணிப் பேறு பெறலாமென்பதே

நிஷ்கர்ஷமாகிறது. முதலியாண்டான் உடையவருடைய திருமேனி ஸம்பந்தமுத்தனேயே தாம் உத்தீர்ணராகைக்குப் போதும் என்றருளிச் செய்தார். அவர் உடையவரோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமுள்ளவராகையாலே அவர் சொல்லவேண்டியது அவ்வளவேயாயிற்று. ஸாக்ஷாத் ஸம்பந்த மற்றவர்களாய் மிகவும் பிற்பட்டிருக்குமவர்களான தேசிகாதிகளுக்கும் அஸ்மதாதிகளுக்கும் பேறுதப்பாதென்று மார்விலே கை வைத்துறங்குகைக்குப் பாங்காக *புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:* என்பதையும், *க்ருத்வா வரம் தததுபந்தமதாவலிப்தே* என்பதையும் எழுதிவைத்தாராயிற்று.

22. * தததுபந்தமதாவலிப்தே * என்று சொல்லியான பிறகு * நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத! * என்று மீளவும் எம்பெருமான் ப்ரஸாதத்தைப் பிரார்த்தித்தது ஏனென்று கேள்வி வரும். கேண்மின். * காதம் பலவும் திரிந்துழன்றாலும் பேறுதருவது அவன் கையதுவேயிறே. அர்த்திகளுக்கு தாதாவின் வாசலல்லது புகலில்லையே. * தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ* என்று ந்யாஸதிலகந்தன்னிலேயேயருளிச் செய்தபடி ஆசாரியன் பக்கலிலே திருமுகங்கொண்டு அவன் ஸந்நிதியிலே புகுவதும், அங்கே முகம் பெறு தொழிந்தவாறே பின்னையும் ஆசாரியன்பாடே மீள்வதும், மீண்டும் மறுக்க வொண்ணாத திருமுகங்கொண்டு எம்பெருமானையே தேடியோடுவது: இங்ஙனே யாதாயாதங்களுக்கு ஓரவதியில்லைகிடீர். கண்ணுஞ்சுழலையிட்டுப் படுகிற பாட்டுக்கு நூல்வரம்பில்லையே.

23. *ப்ரஸீத பகவந்மயி ரங்கநாத!* என்றதற்கு ஸ்வாமி உள்ளபடி திருவுள்ளம்பற்றின பொருளையு முரைக்கோம் கேண்மின். மோக்ஷ ப்ரதானத்திற்காக அரங்கன் ப்ரஸந்நனாக வேணுமென்று கோரினபடியன்று; 'ஸர்வலோக சரண்யரென்று பேர்பெற்றிருக்கிற தேவரீரை த்ருணீகரித்து *தததுபந்த மதாவலிப்தே* என்று மார்புதட்டிச் சொல்லுமடியேன் பக்கலில் ஒரு சீற்றம் பிறக்க ப்ரஸக்தியுண்டு. ஸ்ரீரங்கநாதனாகிற நம்முடைய ஸம்பந்தத்தையே உலகமெல்லாம் உத்தாரகமாகக் கொள்ளாநிற்க, இவர் இதை விட்டு ஒரு மநுஷ்ய வ்யக்தியின் அநுபந்தத்தைப் பெருக்க மதித்துப் பேசுகின்றாரே, இது என்ன செருக்கு! என்று தேவரீருக்குத் திருவுள்ளம் புண்படும். பிரானே! அங்ஙனம் புண்படவேண்டா; உள்ளதைச் சொன்னதாகையாலே என்னப்பனே! சீற்றம் வேண்டா; நியாயத்தை யாராய்ந்து திருவுள்ளம் உகந்தேயிருக்கவேணும்—என்று எம்பெருமானைத் தேற்றினபடியாமத்தனை.

24. ஆக, எம்பெருமானாருடைய அநுபந்தத்தையே தமக்கு நிதியாகப் பற்றிப்பேசினாராயிற்று. ஸகல பூர்வாசார்யர்களிற் காட்டிலும் எம்பெருமானார்க்கு ப்ரஸித்தமாயிருக்கின்ற பெரும்புகழ்க்கு சரணாகதி கத்யமே மூலகாரணமென்று தேறுகிறது. கத்யத்தோடு சேர்த்து எங்கும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்ற *லக்ஷ்மீபதேர் யதிபதேச்ச தயைகதாம்நோர் யோஸௌ புரா ஸமஜநிஷ்ட ஜகத்திதார்த்தம், ப்ராச்யம் ப்ரகாசயது ந: பரமம் ரஹஸ்யம் ஸம்வாத ஏஷ சரணாகதி மந்த்ரஸார:* என்ற ச்லோகம் தேசிகன் பணித்ததென்று சொல்லுகிறார்கள். இந்த ச்லோகமும் முற் சொன்ன பெருமையை ஸ்தாபிக்கிறது. பரம் பரஸ்தாத்.

# லோகவ்யவஹார ரக்ஷா.

லோகவ்யவஹார மென்றும் உலக நீதி யென்றும் பல வழக்கச் சொற்களுண்டு. அவை பெரும்பாலும் சிதைந்தும் உண்மைப் பொருள் விளங்கப்பெறாமலு மிருக்கின்றன. இப்போது இரண்டு மூன்று வார்த்தைகளைப் பற்றின தத்துவமுணர்த்துகிறோம். (1) இலவசமாகக் கொடுத்தான். (2) மடிசார் பாய்கிறது. (3) அதி ஸர்வத்ர வர்ஜயேத். என்கிற மூன்றைப்பற்றி. இரண்டு—தமிழ் வியவஹாரங்கள்; மூன்றாவது ஸம்ஸ்க்ருத வ்யவஹாரம்.

(1) ஒருவன் ஒன்றை விலையில்லாமல் இனாமாகக் கொடுத்தால் பெற்றுக் கொண்டவன் 'இது எனக்கு இலவசமாகக் கிடைத்தது' என்கிறான். இனாமாகக் கிடைத்ததென்னும் பொருளில் இலவசம் என்கிற சொல் உண்டோவென்று கேட்டால் இங்ஙனே உலக வழக்கு இருப்பதனாலே உண்டென்று கொள்ளவேணுமென்கிறார்கள். உண்மையில் இலவசமென்பது சொல்வடிவமன்று; இலைவச மென்பதேயாம். ஒருவனை யொருவன் ஐந்து ரூபாய் கடன் கொடுக்குமாறு கேட்டுக்கொண்டிருந்தான்; இவனுக்குக் கடன் கொடுத்தால் பணம் திரும்பி வராதென்றும், ஏதோ யத்கிஞ்சித் இனாமாகக் கொடுத்தனுப்பி விடுவோமென்றும் நினைத்த அவன் இரண்டு ரூபாயை வெற்றிலையில் வைத்து "இதம் தே தாம்பூலம்" என்று கொடுத்தான். அதற்கு அவன் 'நான் கடனாகத்தானே கேட்டேன்; வெற்றிலையில்வைத்துக் கொடுப்பதேன்?' என்றான். அதற்கு இவன் 'நான் கடன் கொடுப்பதில்லை; ஏதோ இலைவசமாகக் கிடைப்பதைப் பெற்றுக்கொண்டு மகிழ்ந்து செல்' என்றான். அவனும் அதைப் பெற்றுக்கொண்டு 'இரண்டு ரூபாய் எனக்கு இலைவசமாகக் கிடைத்தது' என்று நண்பர்களிடம் சொல்லிக் கொண்டு களித்திருந்தான். இவ்விதமாக வுண்டான வ்யவஹாரமிது. உலகில் வெற்றிலையில் வைத்துக் கொடுப்பது கடனன்று, இனாம் என்பது யாவருமறிந்ததாகும். ஆகவே இலைவச மென்றது வெற்றிலை வழியாக என்றதாயிற்று. வெறுமனே இலையென்றால் வெற்றிலையைக் காட்டுமோ வென்று சங்கிக்க வேண்டா; பரிபாஷையில் வெற்றிலை பாக்கை அடைக்காய் என்கிறோம்; "கையடைக்காயும்" "அடைக்காய் திருத்திநான் வைத்தேன்" என்பன பெரியாழ்வார் பிரயோகங்கள். அடை என்னுஞ் சொல் பொதுவாக இலைக்குப் பெயர்; காய் என்பதும் பொதுவாகக் காய்களுக்குப் பெயர். ஆனாலும் மரபின் வகையால் அடையென்பது வெற்றிலையையும், காய் என்பது பாக்கையும் சொல்லுவது நிர்விவாதம். இங்ஙனமே இலைவச மென்ற விடத்தில் இலையென்கிற பொதுச்சொல் விசேஷித்து வெற்றிலையைக் குறிக்கத் தட்டில்லை.

(2) (மடிஸார் பாய்கிறது) என்பது அர்த்தமற்ற தவறான சொல். தீர்த்தம் சாற்றமுது முதலானவை ஸாதிக்கும்போது ஒரே தாரையாக விழாமல் வேறு வேறு தாரைகளாகவும் பெருகினால் அப்போது மடிஸார் பாய்வதாகச் சொல்லி வருகின்றனர். இங்கு உண்மையான சொல்வடிவம் மறுதாரை பாய்கிறது என்பதேயாம்.

(3) (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) வடமொழியில் இது வொரு தவறான வியவஹாரம். அதிக கோபம் கூடாது, அதிக நிந்தை கூடாது, அதிஸ்தோத்ரம் கூடாது, அதிக ஹிம்ஸை கூடாது, அதி போஜனம் கூடாது;...எதுவும் அளவுபட்டிருக்கவேணுமேயொழிய அதியாகக் கூடாது என்கிற கருத்தில் (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்று வழங்கிவருகிறார்கள். இப்படியே சில புத்தகங்களிலு மிருக்கிறதாம். சிலர் இதை ஸமர்த்திக்க முன் வருகிறார்கள். அதி என்பது வேறொரு சொல்லோடே சேர்ந்து பொருள் தரவல்லதே யொழிய தனிப்பட நின்று ஒரு பொருளையும் தாராது. அதியோக்ய:, அதிசிஷ்ட:, அதிபோக்யம், அதிலங்கநம், அதிக்ரமணம், அதிப்ரஸங்கம், அத்யேதி, அதிக்ராமதி...என்றிப்படி வேறொரு சொல்லோடே சேர்ந்தே அதி யென்பது ப்ரயோகம் பெற்று வருகின்றது. அது தனிப்பட நின்று ஒரு பொருளைத் தாராது. அப்படி தருவதை எங்கும் நாம் காண்கின்றிலோம். ஆகவே (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்று ஸம்ஸ்க்ருத ஜ்ஞர் வாயில் வரத்தகாது. மணிப்ரவாள ச்லோகமென்று கொண்டால் கொள்ளலாம். அவதாரணத்தை விடவேண்டியது, ஸமுச்சயத்தை விடவேண்டியது என்று சொல்ல நினைத்தவர்கள் "ஏவ வர்ஜயேத்" "ச வர்ஜயேத்" என்று சொல்வதை எங்கும் காண்கின்றிலோம். ஆகவே (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்பது அபப்ரயோகமேயாகும். இதை ஸமர்த்திக்க முயல்வதும் அநபிஜ்ஞக்ருத்யமாகும்.

*அதிஸ் ஸர்வத்ர வர்ஜித : * என்பதே விவேகிகளான வித்வான்கள் வழங்குவதும் பொருந்தியதுமாகும். அதி: என்பது சப்த பரமா? அர்த்த பரமா? என்று விசாரம் வரும். முதலில் சப்தபரமாகி, பிறகு அர்த்த பரமுமாகிறது. ப்ரஹ்மஸூத்ரத்தில் * ஈக்ஷதேர் நாசப்தம் * ஈக்ஷதிகர்ம வ்யபதேசாத் ஸ: * என்கிற இரண்டு ஸூத்ரங்களை யெடுத்துக் கொள்வோம். ஈக்ஷதே: என்றவிடத்தில் ஈக்ஷதிதாதுவும் அர்த்தம். அந்த தாதுவின் அர்த்தமான ஈக்ஷணமும் அர்த்தம். வியாக்கியானங்களை விமர்சித்தால் இப்படியேதான் காண்கிறது. ஈக்ஷதிகர்ம என்றது ஈக்ஷணத்திற்குக் கர்மபூதம் என்று பொருள்பட்டு நிற்கும்.

"பகவதா ஹிரண்யகசிபுः ஹத:" என்றால் இவ்விடத்தில் ஹிரண்யகசிபு: என்ற சொல் சப்த பரமா? அர்த்த பரமா? என்று ஆராயவேணும். அர்த்த பரமே யொழிய சப்த பரமன்று. பகவான் ஹிரண்யகசிபு சப்தார்த்தமான வ்யக்தியைக் கொன்றாரேயல்லது ஹிரண்யகசிபு வென்கிற சப்தத்தைக் கொல்லவில்லை. "ஹிரண்யபூர்வம் கசிபும் ப்ரசக்ஷதே" என்ற மஹாகவி வாக்யத்தைக் காண்மின். இங்கு ஹிரண்ய மென்கிற சொல்லை முன்னே யுடைத்தான சொல் கசிபு என்கிற சொல். ஆகவே இங்கு சப்த பரத்வம் சொல்லமுடியுமே யொழிய அர்த்தபரத்வம் சொல்லமுடியாது. ஆனால் கவிக்கு இங்கு அர்த்தந்தான் விவக்ஷிதம். *தேவபூர்வம் கிரிம் தே * ராமேதி த்வ்யக்ஷரம் நாம மாநபங்கம் பிநாகிந:* இத்யாதி பரச்சத ஸ்தலங்களும் காணலாம். இவ்விடங்களிலெல்லாம் சப்தார்த்தங்களுக்கு அபேதமே காணப் படுகிறது. இவை போலவே அதி: என்பது முதலில் அதி யென்கிற சப்தத்தைக் காட்டி, பிறகு உத்தரேண அந்வயயோக்யதாயை அதன் அர்த்தத்தையும் காட்டியே நிற்கும்.

வேங்கடவரதாசார்ய ரென்று பெயர் பூண்டவர்க்குத் தனியனிடுகிறவர்கள் *வேங்கடோபபதோதஞ்சத்வரதார்ய மஹம் பஜே* என்று இயற்றுவதை எங்கும் காண்கிறோம். வேங்கட என்கிற உபபதம் கூடப்பெற்றிருப்பது (வரத) என்கிற சப்தத்திற்கே யொழிய தச்சப்த வாச்ய வ்யக்திக்கு அன்று. ஆயினும் இங்கு சப்தம் விவக்ஷிதமன்று என்பதை விவேகிகள் அறிவார்கள்.

வடமொழியில் வண்டுக்கு (த்விரேப:) என்றொரு பெயர் ப்ரஸித்தம். இரண்டு ரகரங் களையுடையது என்று இதற்குப் பொருள். வண்டினிடத்தில் இரண்டு ரகரங்களுள்ளனவா என்று தேடிப்பார்க்கவேண்டும். வண்டுக்கு வாசகமான ப்ரமர: என்கிற மற்றொரு சொல் லில் இரண்டு ரகரங்கள் உள்ளனவேயன்றி வண்டினிடத்தில் கிடையாது. ஆக, (த்விரேப:) என்னுஞ் சொல் (ப்ரமர:) என்னுஞ் சொல்லுக்கு மாத்திரமே வாசகமாகி அவ்வளவோடு நில்லாமல் அதன் அர்த்தத்தையும் நோக்கிக் கிடக்கிறது என்றுணரவேணும். (ஸத்தாயா: விஷயோ நாஸ்தி) என்னவேண்டு மிடங்களில் (அஸ்தேர் விஷயோ நாஸ்தி) என்று ப்ரயோகிப்பதுண்டு க்ராந்திகர்கள். கூரத்தாழ்வான் ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தில் ஸ்ரீ வைகுண்டத்திற்கு விசேஷணமிடுகையில் (44) *அநஸ்தமிதாஸ்திசப்தம் * என்றொரு விசேஷணமிடுகிறார். அஸ்திசப்தம் ஒரு பலகையில் எழுதிப் பரமபதத்தில் எப்போதும் தொங்கவிடப்பட்டிருக்கிறது என்றோ, பரமபத வீதிகளிலெல்லாம் அஸ்தி சப்தம் அழியாத படி எழுதப் பட்டிருக்கிற தென்றோ இதற்குப் பொருளன்று. அஸ்திசப்தார்த்தமான ஸத்தை எப்போதும் அழியாமலிருக்கப் பெற்றது என்பதேயன்றோ பொருள். இப்படி பல்லாயிரம் காட்டலாம். வ்யுத்பித்ஸுக்களின் வ்யுத்பத்தி வைசத்யார்த்தமாக ஸமயங்களில் பல பலவும் காட்டுவோம். அதி: என்பது ஸுசப்தமா? அபசப்தமா? என்னு மிவ்வளவே பார்க்கவேண்டும். இது பாணினிவாயில் நுழைந்து புறப்பட்ட சொல்லாகையாலே அபசப்த மென்னப் போகாது. சப்தபரமானால் ஸுசப்தம், அர்த்த பரமானால் அபசப்தம் என்கிற வாதம் அடியறுக்கப்பட்டதாயிற்று.

சப்தபரமே யொழிய அர்த்தபரமாகப் ப்ரஸக்தியேயில்லை யென்று கொண்டாலும் ஒரு குறையுமில்லை. அதி என்கிற சொல் எதனோடும் சேரத்தகாது என்பது தாற்பரியமாகும். அதிகோபம், அதித்வேஷம், அதிஸ்நேஹம், அதி உச்ச்ராயம், அதிகர்வம், அதிவிநயம்...... என்றிப்படி விழங்கும்படியாக வைத்துக்கொள்ளக்கூடாது என்றே தேறும். அதிசய:, அதிஸர்வ:, அதிமாநுஷ:.... இத்யாதி சப்தங்கள் கூடாது என்று சொல்லிற்றாக இதனால் ஒரு நாசமும் ஏற்படாது. (அதிஸர்வத்ர வர்ஜயேத்) என்று சொல்லுகிறவர்களுக்கும் என்ன தாற்பரியமென்று பார்க்கவேணும். ஒருவன் இரவும் பகலும் ஒரு க்ஷணங்கூட ஓயாமல் பகவானைத் தொழுவதும் துதிப்பதுமாயிருக்கிறான். இதை அதியாகவே செய்கிறான். இப்படி பகவத் வந்தனங்களை அதியாகச் செய்யக்கூடாது என்றதாகத் தேறுமோ? எந்த காரியத்தை அதியாகச் செய்தால் தீங்காகமுடியுமோ அந்த காரியத்தைத் தான் நிஷேதிப்பது வழக்கம். ஆகவே ஸர்வத்ர என்பது அஸங்குசிதமாக ஸர்வத்தையும் சொல்லி விடாது. ஸர்வார்த்தஸித்தி யென்னும் நூலில் மஹா பாரத பாகவத ராமாயணாதி ஸர்வக்ரந்தார்த்தங்களும் ஸித்திப்பதாக யாரும் நினைக்கமாட்டார்கள். உத்திஷ்ட கதிபயார்த்தங்களே ஸர்வசப்தார்த்தமாகும். ஸர்வத்ர வர்ஜித: என்ற விடத்திலும் இப்படியே தான்.

ஆக, (அதிஸ் ஸர்வத்ர வர்ஜித:) என்பதற்கு சப்ததோஷமுமின்றிக்கே அர்த்தபாதமுமின்றிக்கே ஸர்வாத்மநா நிரவத்யத்வம் ஸித்தமாகையாலும், (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்பது பொருள்தரமாட்டாததாகையாலும் (அதிஸ் ஸர்வத்ர வர்ஜித:) என்பதே வித்வத் பரிக்ராஹ்யமான வ்யவஹாரமாம் என்று தெளிக. ... ... ... ... (*)

## நமது பத்ரிகாபிமானிகளுக்கு அறிக்கை.

இப்பத்திரிகை ஜனவரிமாதமே ஆரம்பமாதமாக இருப்பது பலர்க்கும் பலவிதத்திலும் ஸௌகரியமாகு மென்றெண்ணி சென்ற வருஷத்து முடிவில் (அக்டோபர் முதலிய) மூன்று மாதங்களில் பத்ரிகை வெளியிடாமலிருந்து நேற்று ஜனவரி மாதத்திலேயே 37-வது நெம்பருள்ள பத்ரிகையை வெளியிட்டோம். இதோ 38 வெளிவருகிறது. நமது ஸபையின் நிபந்தனைப்படி சென்ற மாதத்தில் வியாக்கியான ஸஞ்சிகை வெளிவந்திருக்கிறது. அதாவது பகவத் விஷயம் ஈடு முப்பத்தாறுயிரப்படி நாலாம்பத்து வெளியிட்டிருக்கிறது. அடுத்த மார்ச்சு மாதத்தில் மூன்றும் பத்து வெளியிடப்பெறும். மற்ற பத்துக்களெல்லாம் ஏற்கெனவே வெளியிட்டானபடியால் அவ்வளவோடு பகவத் விஷய வெளியீடு முற்றுப்பெறுகிறது.

ஈட்டிலும் மற்றும் மூவாயிர வியாக்கியானங்களிலும் உதாஹரிக்கப் பட்டுள்ள ஸம்ஸ்க்ருத ப்ரமாண வசனங்களுக்குப் பொருள் விளக்கம் வெளியிட வேண்டுமென்று பலர் விரும்பினதற்கிணங்கி அதுவும் இதில் ஆரம்பம் செய்திருக்கிறோம்.

வருடச் சந்தா ரூ. 10 ஒரு வகுப்பாகவும் ரூ. 2—8—0 ஒரு வகுப்பாகவும் சென்ற வருடத்திலிருந்தே ஏற்பாடு செய்திருக்கிறோமென்பது அன்பர்களுக்கு ஞாபக மிருக்கும். 10 ரூ. சந்தா செலுத்தினவர்களுக்கே 12 மாதங்களிலும் ஸஞ்சிகைகள் அனுப்பப்பட்டு வரும். 2—8—0 சந்தா செலுத்தினவர்களுக்கு (ஒன்றுவிட்டொரு மாதம்) ஆறுமாத பத்ரிகைகளே அனுப்பப்படும். இவர்களுக்கு வியாக்கியான ஸஞ்சிகைகள் அனுப்பப்படமாட்டாது. இது தெரிந்திருந்தும் சென்ற மாதம்பத்ரிகை வரவில்லையே யென்று சிலர் எழுதுகிறார்கள். அவர்கள் இதை நன்கு கவனிக்க வேண்டும். எல்லா மாதங்களிலும் விடாமல் பத்திரிகை பெறவிருப்பமுள்ளவர்கள் 10ரூ சந்தா வகுப்பில் சேரவேண்டும். சந்தா பாக்கியுள்ளவர்கள் விரைவில் அனுப்புமாறு கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

இப்படிக்கு

மானேஜர்—ஸத். ப்ர. ஸபை.

# பகவத்விஷயாநுபவம்.

ஸத்துக்கள் நல்லபோது போக்குவதற்குப் பலபல நூல்கள் தோன்றியுள்ளன. ஸ்ரீராமாயணம், ஸ்ரீபாகவதம், பகவத்கீதை, திருமந்த்ரார்த்தம், ஸ்ரீவசநபூஷணம்..........என்றிப்படி பலநூல்கள் மிகச் சிறந்தவையே யிருந்தாலும் பகவத்விஷயத்திற்கு ஸமமான நூல் மற்றொன்று கிடையாது. மேலே சொன்ன ஸ்ரீராமாயணாதிகளும் பகவானைப் பற்றியதாயிருக்கச் செய்தேயும் அவற்றுக்கு பகவத் விஷயமென்று வ்யபதேசம் விளையவில்லை; திருவாய்மொழி முகத்தாலே செய்யும் அநுபவமொன்றுக்கே பகவத் விஷயாநுபவமென்னும் வ்யபதேசம் ஸர்வஜநீநமாகவுள்ளது. எம்பெருமானையநுபவிக்கவேணுமானால் ஆழ்வார் பாசுரங்களைக்கொண்டு அநுபவிப்பதொன்றே மநோஹரமாகும். அந்த திவ்ய ஸூக்திகளினுடைய சுவடு ஸாதாரணமாக எல்லார்க்கும் தெரியாது. சில பாக்யவான்களுக்கே அவ்வநுபவம் ரஸிக்கும்.

ஈடுமுப்பத்தாறாயிரப்படி முதலிய திருவாய்மொழி வியாக்கியானங்களில் விசேஷார்த்தங்களுள்ளன வென்று கேள்விப்படுமவர்கள் அவற்றை வாங்கிப் பார்க்கிறார்கள். ஸகலசாஸ்த்ரப்ரவீணர்களுக்குங்கூட அவகாஹிக்க அரிது என்று ப்ரஸித்தமான அந்த வியாக்கியானங்களிலிருந்து ஸாமான்யர்கள் என்ன விஷயம் க்ரஹிக்க முடியும்? மூலத்திலுள்ள (சப்தார்த்தம் என்னும் படியான) பதப்பொருள்கூட தெரிந்து கொள்ள முடியாமலிருப்பதாலும், ஸதாசார்யர்களை யடிபணிந்து [ஈடு முதலிய அந்த] வியாக்கியானங்களை ஆநுபூர்வியாக ஸேவித்து அர்த்த விசேஷங்களை யறிந்துகொள்ள அவகாசமும் ஸௌகரியமுமில்லாதவர்களாயிருப்பதாலும் பகவத் விஷயாநுபவத்தைப் பெரும்பாலர் இழந்தே போகிறார்கள்.

ஸ்ரீவைஷ்ணவர்களல்லாதாரும் தமிழ் நாடு தவிர்ந்த மற்ற நாடுகளில் பிறந்துள்ளவர்களும் பகவத் விஷயாநுபவ பாக்கியத்திற்கு தூரஸ்தர்கள் என்பதை நாம் சொல்ல வேண்டா. அங்ஙனன்றிக்கே இந்த பாக்யத்திற்கு ஸந்நிஹிதர்களென்று நினைக்கத் தக்கவர்களுங்கூட இவ்விலக்ஷணாநுபவத்தை இழந்தே போகிறார்களென்றால் இது எம்போல்வார்க்கு சோசநீயமாகவே யுள்ளது.

நாம் எழுதி வெளியிட்டுள்ள திவ்யப்ரபந்ததிவ்யார்த்த தீபிகையுரையைக் கொண்டு அநுபவித்து ஆனந்திப்பவர்கள் பலருண்டு; அன்னவர்களைப்பற்றி இங்கு ப்ரஸ்தாவிக்கவில்லை. அல்லாதாருங்கூட பகவத் விஷயப் பெருமையை ஸ்வாநுபவத்தினால் உணரவேணும் என்னுமாவலினால் இப்பத்ரிகையில் ஊடேயூடே திவ்யப்ரபந்தப் பாசுரங்களின் பொருட்சுவையையும் சிறிது சிறிதாகக் காட்டிவரவேணுமென்று தோன்றி நம்மாழ்வாருடைய திருவாய்மொழிப் பாசுரங்களிரண்டை ஈண்டு விவரித்து ரஸாநுபவம் செய்யவும் செய்விக்கவும் குதுகலிக்கிறோம்.

"ஊரவர்கவ்வையெருவிட்டு" "கடியன் கொடியன் நெடியமால்" என்ற இரண்டு பாசுரங்களைக் கொண்டு இப்போது அநுபவிப்போம். எம்பெருமான் தன்விஷயத்தில் ருசியை விளைவிப்பவன் தானே—என்கிற பரமார்த்தம் முந்தின பாசுரத்தினால் விளங்கும். எம்பெருமானிடத்தில் நாம் ஈடுபடுவது அவனது குணங்களைக் கண்டன்று; ஸ்வரூப ப்ரயுக்தம்—என்கிற பரமார்த்தம் பிந்தின பாசுரத்தினால் விளங்கும். இனி இவ்விரண்டு பாசுரங்களின் பொருளையும் அடைவே விவரிக்கிறோம்.

ஊரவர்கவ்வையெருவிட்டு அன்னைசொல்நீர்படுத்து *
ஈரநெல்வித்திமுளைத்த நெஞ்சப்பெருஞ்செயுள் *
பேரமர்காதல் கடல்புரையவிளைவித்த *
காரமர்மேனி நம்கண்ணன்தோழீ! கடியனே.

[திருவாய்மொழி 5-3-4]

**ஆழ்வார்** தாமான தன்மையிற் பேசுவது மாத்திரமன்றிக்கே பெண்ணிலைமை யெய்திப் பேசுவதுமுண்டே. தலைமகள் பாசுரமாகவும் தோழி பாசுரமாகவும் தாய்பாசுரமாகவும் பேசுவர். இப்போது தலைமகள் பாசுரமாய், தோழியோடு ஸம்வாதமாய்ச் செல்லுகிறது. தலைவியானவள் 'எம்பெருமான் என்னை உபேக்ஷித்திருக்கையாலே நான் ஏதோ அதிப்ரவ்ருத்தி செய்யவே போகிறேன்; அதனால் ஊரார் சொல்லும் பழிமொழிகள் விஞ்சினாலும் அதை நான் லக்ஷியம் பண்ணுவேனல்லேன்' என்றாள். அதற்குத் தோழியானவள் தலைவியை நோக்கி, 'அம்மா! ஊரவர் சொல்லும் பழிமொழிகளை நாம் பொருள்படுத்தாமலிருப்பதும் நன்று தான்; ஆனால் எம்பெருமானால் உனக்கு ஏதேனும் லாபமுண்டாயிருந்தால் 'ஊரவர் கவ்வை கிடக்கட்டும்' என்றிருக்கலாம்: எம்பெருமானோ உன்னை ஒரு சரக்காகவும் மதிக்கவில்லையே; ஊரார் பழி சொல்வதொன்றுதானே மிகுகிறது; ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாதவனான அவனை விட்டிடுதலே நலம்' என்று சொன்னாள். அது கேட்ட தலைவி, "தோழி! நீ சொல்லும் வார்த்தையா இது? நன்று சொன்னாய்; எம்பெருமான் எனக்கு என்ன குறைசெய்தான், சொல்லிக்காண்" என்றாள். அதற்குத் தோழியானவள் "அம்மா! ஊரவர் எவ்வளவு பழிமொழிகள் சொல்லினும் அவற்றை லக்ஷியம் பண்ணாதபடியான ப்ராவண்யம் உனக்கு இருக்கச் செய்தேயும் இந்நிலைமையிலும் அவன் வந்து உனக்கு முகங்காட்ட வில்லையே! இதை விட வேறு என்ன குறைவேணும்" என்றாள். அதற்குத் தலைவி "அவன் இப்போதுவந்து முகங்காட்டாவிட்டாலும், தன்னையொழிய நமக்கு மற்றொன்றால் பொருந்தாதபடி [வேறொன்றுகொண்டு போதுபோக்கவொண்ணாதபடி] பண்ணினானே! அவனையா பொல்லாதவனென்று சொல்லுகிறது? என்கிறாள்.

எம்பெருமான் இப்பராங்குச நாயகிக்கு ப்ரேமத்தை விளைவித்தவாறு இப்பாட்டில் விசதமாகச் சொல்லப்படுகிறது. [ஊரவர் கவ்வை எருவிட்டு] ஒரு வயலிலே பயிர் செழிப்புற்றோங்கி விளங்கவேணுமானால் முன்னம் நல்ல எருவிடவேணும்; தண்ணீர் பாய்ச்சவேணும்; நெல்விதைக்கவேணும்; இத்தனை செய்தால் அது முளைத்துச் செழிப்பான பயிராய் வளர்ந்து விளங்கும். அது போல இங்கு ஆழ்வாருடைய நெஞ்சாகிற பெரிய வயலுள் காதலாகிற பயிர் நன்கு வளர்வதற்கு * பத்தியுழவனென்று ப்ரஸித்தனான எம்பெருமான் செய்த காரியங்கள் இதில் ரூபகமரியாதையிலே கூறப்படுகின்றன.

பகவத்விஷயத்தில் அத்வேஷமுண்டான காலமே தொடங்கி ஊரார் பழிசொல்லத் தொடங்கினார்கள். அந்தப் பழியையே ப்ரேமத்திற்கு எருவாக இட்டான் எம்பெருமான். ஊரார் பழிசொல்லா திருந்தார்களாகில் இத்தலைவி பகவத் விஷயத்தை உபேக்ஷித்திருப்பள் போலும். "எனக்குற்றசெல்வ மிராமானுசனென்றிசையகில்லா மனக்குற்ற மாந்தர் பழிக்கில் புகழ்" என்ற இராமானுசநூற்றந்தாதிப் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது.

அன்னை சொல் நீர்படுத்து=ஊரவர் பழிசொல்வதுகொண்டே இவளுடைய பகவத்விஷய ப்ராவண்யத்தைத் தாயாரும் அறிந்து ஹிதவசனங்கள் சொல்ல ஆரம்பித்தாள்; அந்த ஹிதவசனமே தண்ணீர் பாய்ச்சினபடியாயிற்று. எருவாவது அடியிலே ஒருகாலே யிட்டுவிடுவது; நீர் மாறாமல் பாய்ச்சப்படுவது: இத்தால், ஊரார் ஒருகால் பழிசொல்லி விடுமித்தனை; தாயார் உடனிருந்து எப்போதும் பொடிந்துகொண்டே யிருப்பள் என்பது பெறப்படும்.

ஈர நெல் வித்தி=ஈரமென்று அன்புக்குப் பெயர்; அன்பாகிற நெல்லை விதைத்து என்றபடி. விதைத்தவன் எம்பெருமானென்க. அவனே பத்தியுழவன்.

முளைத்த நெஞ்சப் பெருஞ்செயுள் = இங்கு ‘முளைத்த’ என்றதை ‘முளைப்பித்த’ என்றதாகக் கொள்ளவேணுமென்று நம்பிள்ளை திருவுள்ளம். எருவும் இட்டு நீரும் பாய்ச்சினாலும் முளைக்குமிடத்து அவனருள் இன்றியமையாததாகையாலே இங்ஙனே கொள்ளத் தகுதியுண்டு. [நெஞ்சப் பெருஞ்செயுள்] செய் என்று பயிர் விளையும் நிலத்திற்குப் பெயர்; ‘பெருஞ் செயுள்’ என்று பெருமையையிட்டு விசேஷித்ததற்கு நம்பிள்ளையருளிச் செய்தது காணீர்—“ஸம்ச்லேஷவிச்லேஷங்களாலே புடைபடுத்தி நித்யவிபூதியோபாதி பரப்புடைத்தாம்படி பெருக்கினாயிற்று” என்று.

ஆக, ஊராரலராகிற எருவையிட்டு, தாயாருடைய நிரந்தரஹிதவசனமாகிற நீரை நிறுத்தி ஆசையாகிற நெல்லை வித்தி முளைப்பித்த நெஞ்சமாகிற பெரிய விளை நிலத்துக்குள்ளே பேரமர்காதலைக் கடல்போல் விளைவித்தானாயிற்று. பேர்—பெரியதாய், அமர்—அமர்ந்ததான, காதல் என்று பொருள். அமர் என்று பூசலுக்குப் பெயராகக் கொண்டால் பெரிதான பூசலை விளைத்த காதல் என்று கொள்ளலாம். இப்பொருளில் “பேரமர்க்காதல்” என்று ககரவொற்று மிக்குப் பாடமிருக்கவேணும். அமர்ந்த காதல் என்னும் பொருளில் வினைத் தொகையாகையாலே இயல்பாம். விளைவித்த காரமர்மேனி = அடியிலே எருவுமிட்டுநீரும் பாய்ச்சினாலும் மேலே மழை பெய்தல் இல்லையாகில் அப்பயிர் தலை குளிர்ந்திராதே; காளமேகத் திருவுருவைக் காட்டிக் காட்டி இக்காதலை வளர்த்திக்கொண்டு போனானென்பது தோன்ற “விளைவித் தகாரமர் மேனி” என்றது. தோழீ! நம் கண்ணன் கடியனே? = இவ்வளவு மஹோபகாரம் செய்தருளினவனையோ கடியனென்பது. நீதான் தோழியாயிருந்து வைத்து இங்ஙனே சொல்லத்தகுமோ? நீர்மையையுடையவன் என்று சொல்லி முதலிலே பொருந்தவிட்ட நீயே இப்போது நிர்த்தயன் என்னத் தகுமோ? என்கிறாள்.

ஆசார்யஹ்ருதயத்தில் “பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன்பெருஞ்செய்” என்கிற ஆச்சரியமான சூர்ணிகை இப்பாசுரத்தையே முக்கிய லக்ஷியமாகக் கொண்டு அவதரித்தது. (*)

கடியன்கொடியன்நெடியமால் உலகம்கொண்ட
அடியன் * அறிவருமேனிமாயத்தன் * ஆகிலும்
கொடியவென்னெஞ்சம் அவனென்றேகிடக்குமெல்லே ! *
துடிகொளிடைமடத்தோழீ ! அன்னையென்செய்யுமே ? (௫)

முற்பாசுரத்திற்கு அடுத்த பாசுரம் இது.

* * * தோழீ! நான் சொல்லுகிறபடியே எம்பெருமான் குணசாலியாகவன்றிக்கே நீ சொல்லுகிறபடியே குணஹீநனானாலும் என்னெஞ்சம் அவனையல்லது அறியாது; இவ்விஷயத்தில்நின்றும் என்னை மீட்கைக்காகவன்றோ நீ அவனைக் குண ஹீநனென்பது; குணஹாநியை யிட்டே நான் அவனை விரும்பி மேல்விழுகிறேனாகக் கொள்ளாய்; ஆகவே உன்னுடைய சொல்லுக்கு ஒரு ப்ரயோஜன மில்லைகாண் என்கிறாள். இப்பாட்டில்

கடியன் = எம்பெருமானுக்குக் குணஹாநி சொல்லும்போதும் நான் சொல்லவேணுமேயல்லது நீ சொல்லலாகுமோ? அவனையும் என்னையும் கூட்டினவத்தனையே யன்றோ உன் பணி; அவனோடு உள்கலந்து பரிமாறினவள் நானே யல்லது நீயல்லையே. அவனிடத்திலுள்ளது நன்மையோ தீமையோ எதுவானாலும் எனக்குத் தெரிந்தவளவு உனக்குத் தெரிய ப்ரஸக்தியில்லையே; ஆகையாலே குணஹாநியையும் என்வாயால் நான் சொல்ல நீ கேளாய் என்று பீடிகை போட்டுக்கொண்டு இரண்டடிகளாலே அவனது குணஹாநியைச் சொல்லுகிறாள். கடியன் = ஸ்வகார்யத்திலே கனவேக முடையவன் என்கை. தனக்கொரு கார்யமுண்டானால் தானே வந்து மேல்விழுந்து சடக்கெனக் கலக்குமவன் என்றபடி. கொடியன் = இத்தலையில் நோவுபாராதே பிரியுமவன் என்கை. நெடியமால்—மிகவும் பெரியவன்;

அதாவது—கைபுகுந்திருக்கச் செய்தேயும் அளவிட வொண்ணாதபடி யிருக்குமவன் என்கை. இதனுடைய கருத்தாவது—மேல்விழுந்து கலவா நிற்கச்செய்தே பிரியவேணுமென்று நினைப்பன்; அப்படி அவன் நினைத்ததையறிந்து, பிரியலாகாதென்று மடிபிடித்துக் கால்கட்டி விலக்கப்பார்க்கலாமே; அப்படி விலக்குவதற்குக் கூசி நடுங்கி அஞ்சியிருக்க வேண்டும்படி திடரென்று பாத்வம் பாராட்டியிருப்பவனென்றவாறு.

உலகங் கொண்டவடியன்=பிறருடைமையைத் தனக்காக்க நினைத்தால் பின்னையும் அவர்களுக்கு ஓர் அடியும் சேஷியாதபடிபண்ணி அவர்களைப் பாதாளத்திலே தள்ளுமவன்.

அறிவருமேனி மாயத்தன்=வடிவைக்கண்டால் 'ஸர்வஸ்வதானம் பண்ண விருக்கிறானோ? ஸ்ர்வஸ்வாபஹாரம் பண்ண விருக்கிறானோ? என்று தெரியாதபடி ஆச்சரியமான தன்மையை யுடையவன். மாயத்தன் என்றதற்கு நம்பிள்ளையீடு;—"நானும் என்னுடைமையும் நீ யிட்டவழக்கு என்ற இவ்வுக்தியை அநுஸந்தித்து அதிலே நெஞ்சு அபஹ்ருதமா யிருக்க, அவ்வளவிலே கண்ணிலே மணலைத்தூவி அகலவல்லவன்" என்பதாம்.

இப்படிப்பட்ட குணஹானிகளைக் கோடிக்கணக்காகச் சொல்லவேணுமானாலும் நானன்றோ சொல்லவல்லேன்; தோழீ! இவை உன்னாலும் சொல்லப்போகாது; இதற்கென்றே இட்டுப்பிறந்த சிசுபாலாதிகளாலும் சொல்லப் போகாது; இவ்வளவு குணஹானிகளையும் நான் அறிந்துவைத்தேயன்றோ இவ்விஷயத்தில் ஈடுபட்டுக்கிடக்கிறது. ஆகிலும் என்றதனால் ஏற்படுகிற கருத்து இது.

கொடிய என்னெஞ்சம்=லோக விலக்ஷணமாயன்றோ என்னுடைய நெஞ்சு இருப்பது. குணம்கண்டு பற்றுவதும், குணஹானிகண்டு கைவிடுவதும் நாட்டார் படியாயிருக்க, குணஹானிதானே பற்றுகைக்கு உடலாயன்றோ எனக்கிருக்கிறது என்கிறாள்.

அவனென்றே கிடக்கும் என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் நிர்வஹிப்பர்கள். இவை தோஷங்களே யானாலும் அவனுடைய தோஷங்களாகையாலே தத்ஸம்பந்தத்தையிட்டு இவை நமக்கு உபாதேயங்களே யென்று நெஞ்சு கொள்ளுவதாக ஒரு நிர்வாஹம். கீழ்ச் சொன்ன குணஹானிகளில் நோக்கு இன்றிக்கே தர்மியான எம்பெருமானை மாத்திரமே என்னெஞ்சு பற்றி யிருக்கின்றது—என்பதாக மற்றொரு நிர்வாஹம். "நிர்விசேஷ சின்மாத்ரம் ப்ரஹ்ம" என்று மாயாவாதிகள் விசேஷணமற்ற விசேஷ்யாம்ஶத்தை மாத்திரம் அங்கீகரிக்கிறாப்போலே, குணமோ குணஹானியோ அந்த விசேஷணாம்ஶத்தில் தாத்பர்யமின்றிக்கே விசேஷ்யபூதனான எம்பெருமானளவிலே ஊன்றியிருக்கின்றதாகச் சொன்னபடி.

ஸ்ரீவசநபூஷணத்தில்—'பகவத் விஷயத்தில் இழிகிறதும் குணங்கண்டன்று; ஸ்வரூப ப்ராப்தமென்று. இப்படி கொள்ளாதபோது குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத் விஷயப்ரவ்ருத்தியும் தோஷாநுஸந்தாந தசையில் ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியும் கூடாது. *கொடியவென்னெஞ்ச மவனென்றே கிடக்கும் * அடியேன் நான் பின்னுமுன் சேவடியன்றி நயவேன் * என்னா நின்றார்களிறே. குணக்ருததாஸ்யத்திலுங் காட்டில் ஸ்வரூப ப்ரயுக்தமான தாஸ்யமிறே ப்ரதாநம். அநஸூயைக்குப் பிராட்டியருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது." என்றுள்ள திவ்ய ஸூக்திகள் இங்கே அநுஸந்தேயங்கள்.

தலைவி சொன்ன வார்த்தையைக்கேட்ட தோழியானவள் "அம்மா! நீ சொல்லுமதை நான் அறியேனோ? நான் விலக்குகிறேனல்லேன்; தாயார் வெறுக்கும் என்று சொல்லுகிறேன்" என்ன; அன்னை யென்செய்யுமே என்கிறாள்;—உன்வார்த்தை கேளாதநானோ தாயார் வார்த்தை கேட்பேன்? அந்நிலை கழிந்ததில்லையோ வென்றாளாயிற்று. ... *

# ஓர் அறிவிப்பு.

சாஸ்த்ரார்த்தசந்த்ரிகை யென்னும் பெயரால் மாதம் மும்முறைப் பத்திரிகை யொன்று மூன்று மாத காலமாக நாம் வெளியிட்டு வருகிறோ மென்பது பலருமறிந்ததே. இதற்கு சந்தா கிடையாது. பண்டிதர்களுக்கு மாத்திரம் இது இனாமாக அனுப்பப்பட்டுவரும். இதற்கு உரிய அதிகாரிகளென்று நமக்குத் தெரிய வருகிறவர்களுக்கே இதனையனுப்ப திட்டம் செய்திருக்கிறோம். இதைப் பலரும் பெற விரும்பிக் கடிதங்களெழுதுகிறார்கள். ஸ்ரீராமாநுஜனிலேயே இதைச் சேர்த்து வெளியிடக் கூடாதா? என்றும் பலர் எழுதுகிறார்கள். அப்படி நாம் வெளியிட உத்தேசிக்கவில்லை, அது தனியாகவே வெளிவரும், அபேக்ஷையுள்ளவர்கள் ஸ்டாம்புகள் கவரில் வைத்தனுப்பி வருவித்துக் கொள்க. இந்த சந்த்ரிகையின் நடை எப்படிப்பட்டதென்று அன்பர்கள் தெரிந்து கொள்வதற்காக மாத்திரம் சில பத்ரிகைகளை இதில் சேர்த்து வெளியிடுகிறோம். ஆனால் அப்பத்ரிகை சேர்ந்த இந்த ஸஞ்சிகை எல்லார்க்கும் அனுப்பப்படுவதில்லை. உபயோகப்படக் கூடியவர்களுக்கே அனுப்புகிறோம். அது சேர்ந்த ஸஞ்சிகை கிடைக்கப் பெறாதவர்கள் அபேக்ஷையுடையவர்களாயிருந்தால் "காஞ்சீபுரம் க்ரந்தமாலா ஆபீஸ்" என்ற விலாஸத்திற்கு எழுதிக்கொள்க. அவர்கள் 0—2—0 ஸ்டாம்புகள் அனுப்ப வேண்டும்.

திருமந்த்ரார்த்தம் ஸ்ரீவசநபூஷணம் முதலான ரஹஸ்ய க்ரந்தங்களில் தேறியிருக்கின்ற மஹார்த்தங்களெல்லாம் சாஸ்த்ர பரிசய முள்ளவர்களுக்கே நன்கு நெஞ்சிற் பதியத் தக்கவை. ஸம்ஸ்க்ருத பாஷையில் விசேஷ ப்ரவேச மிருந்தாலொழிய அந்த மஹார்த்தங்கள் ரஸிக்க மாட்டா. பிராட்டியின் உபாயத்வம், ஜகத் காரணத்வம், விபுத்வம், எம்பெருமானுடைய வ்யாப்தி......இப்படிப்பட்ட விஷயங்கள் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்கே நன்கு க்ரஹிக்கக் கூடியவை. அவ்விஷயங்களை நாம் தமிழில் எவ்வளவு விசதமாக எழுதினாலுங்கூட அவை சாஸ்த்ரீய விஷயங்களாதலால் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்கு ரஸிப்பது போல் மற்றையோர்களுக்கு ரஸிக்காது. ஆகவே அப்படிப்பட்ட விஷயங்களை நாம் தமிழில் எழுதுவதோடு நிற்காமல் ஸம்ஸ்க்ருத பாஷையிலும் வெகு லலிதமான நடையில்—ஸாதாரண வ்யுத்பந்நர்களும் புரிந்து கொள்ளக் கூடிய ஸரணியில் எழுதி வருகிறோம். அவை தேவநாகர லிபியில் அச்சிடப்பட்டு வருகின்றன. அவை சாஸ்த்ரார்த்த சந்த்ரிகையின் மூலமாகவே வெளிவந்து கொண்டிருக்கும். வைதிக மநோஹரா என்னும் பெயரால் நாம் நடத்தி வருகிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையில் அது அடக்கமாகும். ஆகவே வைதிக மநோஹராவுக்கு வருடச் சந்தா ரூ. 3. செலுத்தி சந்தாதாரர்களாய்ச் சேருமவர்களுக்கு அவை தவறாமல் கிடைத்துவரும்.

மற்றவர்கள் அவற்றை வாசிக்க விரும்பினால் 0—4—0 ஸ்டாம்பு கவரில் வைத்தனுப்பினால் உடனே அனுப்புவோம். ருசியுடையார்களெல்லாரும் இவற்றைக் கண்டு களிக்க வேணு மென்னுமாவல் கொண்டே இவை எழுதவும் அச்சிடவும் படுகின்றன. அபேக்ஷை தெரிந்தால் ஆதரத்தோடு அனுப்புவோம்.

இப்படிக்கு,

மானேஜர்—க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

# "அது சுமந்தார்கட்கே"

திருவாய்மொழியில் (3—3.) *ஒழிவில் காலமெல்லாமென்கிற பதிகத்தில்* வேம்கடங்கள்* என்பது ஆறும்பாட்டு. இதில் பின்னடி "வேங்கடத்துறைவார்க்கு நம வென்னலாங்கடமை யதுசுமந்தார்கட்கே" என்றுள்ளது. "வேங்கடத்துறைவார்க்கு நம:" என்கிற இச்சொல்லைச் சொல்லுமவர்க்கு கைங்கர்ய விரோதியான பாபங்களெல்லாம் போம்—

என்பது இங்கு விஷயம். இதற்குச் சேர "நமவென்னுஞ் சொல் சொல்லுவார்க்கே" என்று ஆழ்வார் பாசுரமருளிச் செய்திருக்கவேண்டும். மூலம் அப்படியில்லை. "நம வென்னலாங்கடமைய து சுமந்தார்கட்கே" என்று விலக்ஷணமாக இருக்கின்றது. நம: என்று சொல்லுவதை ஒரு பெரியசுமை சுமப்பதாக வைத்துப் பாசுரமருளிச் செய்திருக்கிறார் ஆழ்வார். இப்படி எதற்காக அருளிச்செய்யவேண்டும்? நம: என்ற இரண்டெழுத்தைச் சொல்லுவது ஒரு சுமையாகுமா? என்று பலரும் சங்கிக்கக் கூடியதுண்டு. இதற்கு நம்பிள்ளை இரண்டு வகையான ஸமாதான மருளிச் செய்கிறார். (1) நம: என்று சொல்லுவது எளிதேயாயினும் அதை ஒரு பெரிய மலைசுமப்பது போல வெண்ணியன்றோ ஸம்ஸாரிகள் நம: என்று சொல்லமாட்டாதிருக்கிறார்கள். ஆக ஸம்ஸாரிகளின் நினைவை ஆழ்வார் அநுவதிக்குமாபோலே அருளிச்செய்தபடி—என்பது முதல் ஸமாதானம். (2) எம்பெருமானுடைய திருவுள்ளத்தினால் சொன்னதாகவுமாகலாம் என்று இரண்டாவது ஸமாதானம். பக்தர்களின் வாக்கில் நம: என்றொரு சிறிய சொல் வந்தாலும் அதை மலையாக நினைப்பனாம் எம்பெருமான். அதையிட்டே * கஸ்மைசிதஞ்ஜலிஹரம் வஹதே* என்று ஸ்ரீ குணரத்ந கோசத்தில் பட்டர் அருளிச் செய்தார். இரண்டு கைகளை ஒன்றாகச் சேர்க்கையாகிற அஞ்ஜலியானது சுமையாகக் கூடியதன்றாயினும் பட்டர் (அஞ்ஜலிபரம்) என்று [பாரமாக சுமையாகச் சொன்னது எம்பெருமானது கருத்தாலே.

ஆக, சுமந்தார்கட்கே என்றும் (ஹரம்வஹதே) என்றும் அருளிச் செய்த ஆழ்வார்க்கும் ஆசிரியர்க்கும் "ஹூயிஷ்஠ாம் தே நமஉக்திம் விதேம—பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம" என்ற பகவத் பரமான உபநிஷத் வாக்யத்தில், 'பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம' என்று அந்வயமின்றிக்கே, (தே பூயிஷ்டாம் நமஉக்திம்) என்று அந்வயமாகி, எம்பெருமானே! உன் திருவுள்ளத்தினால் சுமையான நமஉக்தியைச் சொல்லக் கடவோம் என்று இங்ஙனே பொருள் திருவுள்ளம் என்று நம்பிள்ளை தெரிவித்தாராயிற்று. இதைப் பற்றின விவரணங்களை நமது தத்வார்த்த பூஷண க்ரந்தத்தில் விரியக் காண்க. ... .... ... *

## திருநாராயணபுரத்தில் திருத்தேர் கைங்கரியம்.

மேல்கோட்டை யென்று ப்ரஸித்தமான திருநாராயண புரத்தில் யதிராஜ ஸம்பத்குமாரனை செல்வப் பிள்ளைக்கு திருத்தேர் சில வருஷங்களாகச் சிதிலமாகி உத்ஸவத்திற்கு உபயோகப் படாமலிருந்தது. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமிகள் சென்ற ஆண்டில் அந்த திவ்ய தேசத்திற்கு எழுந்தருளினபோது இந்த திருத்தேரை ஜீர்ணோத்தாரணம் செய்து செல்வப்பிள்ளை யுத்ஸவத்திற்கும் எம்பெருமானுத்ஸவத்திற்கும் உபயோகமாம்படி செய்விக்கத் திருவுள்ளம்பற்றி தீவ்ரமான முயற்சி செய்ததில் இதுவரை சுமார் ரூ. 30,000 வசூலாகி அநேகமாய் ஜீர்ணோத்தாரணமாய்விட்டது. நாளது வைரமுடி யுத்ஸவத்தில் இத் திருத்தேரில் திருவீதிப் புறப்பாடு கண்டருள ப்ராப்தமாகும். ஸ்ரீபரகால ஸ்வாமி ஸ்ரீமத் வானமாமலை ஸ்வாமி, ஸ்ரீமதஹோபிலம் ஸ்வாமி முதலான மடாதிபதிகளும் மைஸூர் மஹாராஜா முதலான பிரபுக்களும் மற்றும் பல ஆஸ்திக தனிகர்களும் இக்கைங்கர்யத்திற்கு உதவி புரிந்திருப்பதாகத் தெரியவருகிறது. இன்னமும் 10,000 ரூபாய்க்குமேல் பக்தர்களின் உதவி எதிர்பார்க்கப்படுகிறது. பாக்யசாலிகளுக்கு ப்ராப்தமாகும். ஸ்ரீ. உ. வே. வித்வான் மண்டயம் ஆழ்வார் திருமலையங்கார் ஸ்வாமி. ஸ்ரீமான் M. K. நாயகர் முதலானவர்களின் பெருமுயற்சி மிகவும் போற்றத்தக்கது.

---

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

**ஸ்ரீமத் உ. வே. ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்**

**அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின்**

**அறுபத்தோராமாண்டு நிறைவு மஹோத்ஸவ**

# ப்ரகடனப் பத்திரிகை.

## —ஸ்ரீ காஞ்சீபுரியில் 16-3-52-முதல் 12-4-52-வரை இருபத்தேழு நாள் மஹோத்ஸவம்—

நிகழும் கரநாமஸம்வத்ஸரம் பங்குனி மாதத்தில் முதலிலும் முடிவிலுமாக இரண்டு திருவிசாக நக்ஷத்திரங்கள் வருகிறபடியால் முதல் திருவிசாகத்தில் தொடங்கி முடிவு திருவிசாகம் வரையில் இருபத்தேழு நாட்களில் ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமியின் அறுபத்தோராமாண்டு நிறைவு மஹோத்ஸவத்தைச் சிறப்பாக நடத்திவைக்க ஸ்ரீ ஸ்வாமியின் திருவடி ஸம்பந்திகளும் மற்றும் ஆப்தர்களான பல மஹான்களும் குதூஹலம் கொண்டிருக்கின்றார்கள். இம்மஹோத்ஸவத்தின் நிகழ்ச்சிகள் கீழ்க்கண்ட விவரப்படி நடைபெறும்.

பங்குனிமீ 3உ திருவிசாக நன்னாள் (16-3-52) மாலை 6-மணிக்கு ஸாமவேத பாராயணம் தொடக்கமாகி திருவீதிவலம் வந்து இரவு 9-மணிவரை ஸாமகானம் நடைபெறும். இவ்விதமாகவே 25-3-52உ வரையில் தினந்தோறும் காலை மாலைகளில் ஸாமவேத பாராயணம் திருவீதி ப்ரதக்ஷிணத்துடன் நடைபெற்று பங்குனிமீ 12உ இரவு (ஸாமகானம்) ஸமாப்தமாகும். இதனிடையிலேயே பங்குனிமீ 10உ (23-3-52-ல்) காலை 7-மணிக்கு யஜுர்வேத பாராயணம் தொடக்கமாகும். காலை 7-மணி முதல் 10-மணி வரையிலும், மாலை 6-மணி முதல் 9-மணி வரையிலும் பத்துநாள் நடைபெறும். இந்த 10-நாட்களிலும் காலை மாலைகளில் ஸகல ஸ்தோத்ரங்களும் ரஹஸ்யங்களும் அநுஸந்திக்கப்படும். பங்குனிமீ 19உ காலை யஜுர்வேத பாராயண ஸமாப்தியாகும். அன்று மாலை (1-4-'52) 7-மணிக்கு திவ்யப்ரபந்த ஸேவை தொடக்கமாகி பங்குனிமீ 30உ (12-4-52) திருவிசாகத்தன்று சாத்துமுறையாகும்.

## விசேஷ அறிவிப்பு.

1. ஸாமவேத பாராயணமொன்றே இரவு வேளைகளில் நம்பிள்ளை ஸன்னிதியில் நடைபெறும். மற்றவையாவும் ஸ்வாமி திருமாளிகையிலேயே நடைபெறும்.

2. காஞ்சீபுரத்தில் அமுதுபடி ரேஷன் நிர்ப்பந்தம் கடுமையாயிருப்பதால் ததீயாராதனை நடத்த ஸௌகர்யமில்லை. பாராயணங்களில் அந்வயிக்கும் ஸ்வாமிகளுக்கு போஜனத்திற்காக தினமொன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் ஒவ்வொரு நாளும் தனியே ஸமர்ப்பிக்கப்படும். அதைக்கொண்டு ஸௌகரியமான இடங்களில் போஜனத்தை நடத்திக்கொள்ள தைரியமுள்ள ஸ்வாமிகளே வெளியூர்களிலிருந்து எழுந்தருளக்கடவர்கள்.

3. வேத திவ்யப்ரபந்தங்களில் பரிபூர்ணாதிகாரிகளான ஸகல ஸ்வாமிகளும் எழுந்தருள இதனால் பிரார்த்திக்கப்படுகிறார்கள். எழுந்தருள ஸௌகரியமுள்ளவர்கள் 5-3-'52-ந் தேதிக்குள்ளாக கீழே குறிக்கும் விலாஸத்திற்கு தங்கள் முழுவிலாஸத்துடன் கடிதமெழுதிக் கொள்ளவேணும். ஆஹ்வான பத்ரிகையைப் பெற்றுக்கொண்டு அவர்கள் வந்து சேரவேணும். அவர்களுக்கு முன்னாடியே பிரயாணச் செலவும் அனுப்பப்படும். அவர்களின் போஜனத்தைப் பற்றின கவலை எங்களுக்குச் சிறிதும் இருக்கக்கூடாதென்பதை மறுபடியும் ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறோம்.

4. எழுந்தருளுகிற வித்வான்களின் ஸௌகரியங்களுக்குத் தக்கபடி உபந்யாஸங்கள் ஏற்பாடாகி சென்ற வருஷம்போலவே உபந்யாஸ கோஷ்டியும் நடைபெறும். அதைப்பற்றின அறிக்கை தனியாக வெளிவரும்.

5. இந்த மஹோத்ஸவத்தைச் சிறப்பாக நடத்திவைக்க மதராஸ் ஜி. டி. அண்ணாபிள்ளைத் தெரு, 147-வது இலக்கமுள்ள இல்லமே நிர்வாஹக் கமிட்டியின் கார்யாலயமாகும். ஷை கமிட்டியின் கார்யதரிசியான வி. ராதாக்ருஷ்ணய்யாவுக்குக் கடிதங்கள் எழுதிக் கொள்வது.

இப்படிக்கு:

ஷை நிர்வாஹக் கமிட்டியின் உபகார்யதரிசியான,

**பண்டிட் - P. R. வரதாசாரியன்**

27, தங்கசாலைத் தெரு, மதராஸ் - 3.

ரத்னம் பிரஸ், 11, பத்ரையன் தெரு, மதராஸ் - 1.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பகவத்விஷயப் பிரமாணத் திரட்டு

## (ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் எழுதிய பொழிப்புரையுடன்)

### (முதல் ச்ரிய: பதி)

1 ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்ட கர்மணா,
சுபேந மநஸா த்யாதம் கவாம் வ்ருத்திமபீப்ஸதா. (வி. பு. 5. 6. 28.)

*எளிதில் காரியத்தை முடிப்பவரும் பசுக்களுடைய அபிவிருத்தியை விரும்புபவருமான கண்ணபிரானால் நல்ல மனதோடு பிருந்தாவனம் நினைக்கப்பட்டது. (நெரிஞ்சிக் காடு முழுதும் பசும்புற்காடாக வேணுமென்று நினைக்கப்பட்டதென்றபடி.)*

2 உத்பந்ந நவ சஷ்பாட்யா சக்ரகோபாஸ்த்ருதா மஹீ,
ஸ்தலீ மாரதகீவாஸீத் பத்மராகக்ருதாந்தரா. (வி. பு. 5. 6. 37.)

*இளம் புற்களாலும் பட்டுப்பூச்சிகளாலும் நிரம்பப் பெற்ற (அந்த) பூமியானது, பத்மராகக் கற்களிழைக்கப்பட்ட மரகத மணியாலான தரை போலிருந்தது.*

3 தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா,
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே. (கீதா. 7-14.)

*முக்குண ரூபமான இந்த என் மாயையை, என்னைச் சரணமடைபவர்கள்தான் கடக்கிறார்கள்.*

4 ஜராமரண மோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே,
தே ப்ரஹ்ம தத் விது: க்ருத்ஸ்ந மத்யாத்மம் கர்ம சாகிலம். (கீதா. 7. 29)

*மூப்பு, இறப்பு ஆகிய இவற்றை யொழிக்க என்னை யடைந்து முயலுபவர், ப்ரஹ்மத்தையும் ஆத்ம ஸம்பந்தி பூத ஸூக்ஷ்மங்களையும் ஸகல கர்மங்களையு மறிகிறார்கள்.*

5 ஸம்ஜ்ஞாயதே யேந ததஸ்ததோஷம் சுத்தம் பரம் நிர்மல மேகரூபம்,
ஸந்த்ருச்யதே வாப்யதிகம்யதே வா தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம். (வி. பு. 6. 5. 38)

*தோஷமற்ற நிர்மல சுத்த ப்ரஹ்மம் எதனால் அறியப்படுகிறதோ அல்லது அடையப்படுகிறதோ அதுதான் ஞானம். மற்றது அஜ்ஞானம். பகவத் ப்ராப்திஸாதனமானதுவே ஞானமென்றபடி*

6 தத் கர்ம யந் ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே,
ஆயாஸாயாபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம். (வி. பு. 1. 19. 41.)

*ஸம்ஸார பந்தத்தின் பொருட்டு ஆகாத கருமமே கருமமாகும்; மோக்ஷத்திற்கான வித்யையே வித்யை. மற்ற கர்மங்கள் சிரமத்திற்கே; வேறு வித்யைகள் சில்ப சாமர்த்தியமே.*

7 கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வஸ்ரஷ்டாரமீச்வரம்,
நார்ச்சயிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோபஹதா ஜநா: (வி. பு. 6. 1. 50.)

*மைத்ரேய! கலியுகத்தில் பாஷண்டிகளால் கெடுக்கப்பட்ட ஜனங்கள், எல்லாவற்றையும் படைக்கும் லோக நாயகனான விஷ்ணுவைப் பூஜிக்க மாட்டார்கள்.*

8. துர்லபோ மாநுஷோ தேஹோ தேஹிநாம் க்ஷணங்குர:,
தத்ராபி துர்லபம் மந்யே வைகுண்டப்ரியதர்சநம். (பாகவ 11. 2. 26.)

*கொடியிலழியும் மனித சரீரம் எளிதிற் கிடைக்காது; அதிலும் ஸர்வேச்வரனிடத்தில் பக்தியுண்டாகப் பெறுவது மிகவுமரிது.*

9. மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித் யததி ஸித்தயே,
யததாமபி ஸித்தாநாம் கச்சிந் மாம் வேத்தி தத்வத:. (கீதா. 7. 3.)

*ஆயிரத்தில் ஒருவன் ஸித்தியடைய முயல்கிறான்; அப்படி முயன்று ஸித்தி பெற்றவர்களுள் ஆயிரத்தில் ஒருவன் உண்மையாய் என்னை அறிகிறான்.*

10. ததோகில ஜகத்பத்ம போதாயாச்யுதபாநுநா,
தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம் மஹாத்மநா. (வி. பு. 5. 3. 1).

*ஸகலலோகங்களாகிற தாமரை மலருவதற்காகத் தேவகி யென்கிற கிழக்குத் திக்கில் க்ருஷ்ண னென்ற சூர்யன் உதித்தான்.*

11. ஹஸிதம் பாஷிதஞ்சைவ கதிர் யா யச்ச சேஷ்டிதம்,
தத் ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி. (ராமா. பா. 3. 4.)

*அவரவர்களுடைய சிரிப்பு, பேச்சு, நடை, கார்யம், ஆகிய இவைகளை (வால்மீகி முனிவர்) தர்ம பலத்தால் உள்ளபடி நன்கறிகிறார்.*

12. உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்,
ஆஸ்திதஸ் ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம். (கீதா. -18)

*கீழே * ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ * என்னப்பட்ட அனைவரும் உதாரர்களே; ஆனாலும் ஞானியோ வென்னில், எனது ஆத்மா; அவன் என்னையே உத்தமமான கதியாக நம்பியிருக்கிறான்.*

13. பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்தோ லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்த்தந:,
ராமஸ்ய லோகராமஸ்ய ப்ராதுர் ஜ்யேஷ்டஸ்ய நித்யச:. (ராமா. பா. 18. 27.)

*செல்வம் பொலிய நின்ற லக்ஷ்மணன் ஜனங்களை மகிழ்விக்கும் மூத்த தமையனான இராமனுக்குக் குழந்தைப் பருவம்முதல் மிகவுமன்பன்.*

14. நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ,
முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந் மத்ஸ்யாவிவோத்த்ருதௌ. (ராமா. அ. 53. 31.)

*ராகவ! உம்மைவிட்டுப் பிரிந்த சீதையும் நானும் ஜீவித்திருக்கமாட்டோம்; ஜலத்திலிருந்து எடுத்த மீன்களைப்போல க்ஷணகாலம் உயிருடனிருந்தாலிருக்கலாம். (என்கிறான் லக்ஷ்மணன்.*

15. ந தேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே.
ஐச்வர்யம் வாபி லோகாநாம் காமயே ந த்வயா விநா. (ராமா அ. 31-5.)

*உம்மைத் தவிர்த்து தேவலோகத்தை யடையவோ கைவல்யம் பெறவோ திரிலோகாதிபத்யத்தையோ நான் விரும்பவில்லை. (என்கிறான் லக்ஷ்மணன்.)*

16. அஹம் தாவந் மஹாராஜே பித்ருத்வம் நோபலக்ஷயே,
ப்ராதா பர்த்தா ச பந்துச் ச பிதா ச மம ராகவ:. (ராமா. அ. 58-31.)

*தசரதரைத் தகப்பனாக நான் கருதவில்லை; எனக்கு ஸஹோதரனும் ஸ்வாமியும உறவினரும்தந்தையும் ராமனே. (என்றான் லக்ஷ்மணன்.)*

17. அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச் ச தே,
பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே. (ராமா. 2-31-25)
விழித்துக்கொண்டும் தூங்கிக்கொண்டுமிருக்கிற காலங்களில் உமக்கு எல்லாப்பணிவிடைகளையும் நான் செய்வேன்; நீரோ ஸீதையுடன் மலைத்தாழ் வரைகளில் மகிழ்வீர். (என்று இராமனை நோக்கி லக்ஷ்மணன் கூறியது.)

18. விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிஞ்ச ஜநார்தந.
பூய: கதய த்ருப்திர் ஹி ச்ருண்வதோ நாஸ்தி மேம்ருதம். (கீதா. 10-18)
ஜநார்தந! உமது யோகத்தையும் விபூதியையும் விரிவாகக் கூறும். உமது மாகாத்ம்யமாகிற அம்ருதத்தை எவ்வளவு அருந்தினாலும் எனக்குத் திருப்தியே கிடையாது. (என்று கண்ணனை நோக்கி அர்ஜுனன் கூறுகிறான்.)

19. காமாபிதப்தா: பர்ஜந்யம் ஹ்லாதயந்தமிவ ப்ரஜா:,
ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப:. (ராமா. 2. 3. 29)
கோடையில் தவிக்கிற ஜனங்களை மகிழ்விக்கும் மேகம் போன்று தன்னருகில் வரும் இராமனைப்பார்த்து தசரதர் சிறிதும் திருப்தியடையவில்லை.

20. தர்மாத்மா ஸத்யசௌசாதிகுணாநாமாகரஸ் ததா,
உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத். (வி. பு. 1-15-156)
தர்மஸ்வரூபியாயும் ஸத்யம் சௌசம் முதலிய குணங்களுக் கிருப்பிடமாயும் ஸகலஸாதுக்களுக்கும் உபமாநமாயும் ப்ரஹ்லாதன் இருந்தான்.

21. அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்யமுபாகத:,
க்ருதஜ்ஞஸ்ய பஹுஜ்ஞஸ்ய லக்ஷ்மணோ நாம நாமத:. (ராமா. 4. 4. 12,)
செய்ந் நன்றியுள்ள முற்று முணர்ந்த இந்த ஸ்ரீராமர் என்னைத் தம்பியாக நினைத்திருக்கிறார்; நானோ இவருடைய குணங்களுக்குத் தோற்று அடிமைப்பட்டவன்; என் பெயர் லக்ஷ்மணன்.

22. மாநிஷாத ப்ரதிஷ்டாம் த்வமகம: சாச்வதீ: ஸமா:,
யத் க்ரௌஞ்சமிதுநாதேகமவதீ: காமமோஹிதம். (ரா. 1-2. 15)
ஓ வேடனே! காமத்தால் மயங்கிய அன்றில் பக்ஷிகளில் ஒன்றைக் கொன்ற நீ நெடுநாள் வாழமாட்டாய். ஸீதாபதியே! காமமோஹிதனை இராவணனைக் கொன்ற நீர் நெடுநாள் வாழ்க.

23. மச்சந்தாதேவ தே ப்ரஹ்மந் ப்ரவ்ருத்தேயம் ஸரஸ்வதீ,
ராமஸ்ய சரிதம் ஸர்வம் குரு த்வம் ருஷிஸத்தம. (ரா. 1-2. 3.)
முனிவரே! என் விருப்பப்படியேதான் ஸரஸ்வதி உம்மை வந்தடைந்தாள்; இப்படியே ராம சரித முழுவதையும் செய்யும். (என்று வான்மீகியை நோக்கிப் பிரமதேவனருளியது.)

24. ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம,
பாஷாகாநம் ந காதவ்யம் தஸ்மாத் பாபம் த்வயா க்ருதம். (லிங்கபு.)
எம்பெருமானுடைய புகழைத்தவிர வேறு விஷயமான பாட்டுக்களைத்தான் பிராமணன் பாடக்கூடாது; அரசனே! அதையறியாமல் நீ ஹரி கீர்த்திகளைப் பாடின அந்தணர்களைச் சிறைபிடிப்பித்தபடியால் நீ பாவமே செய்தனை. (இது யமகிங்கர வார்த்தை.)

25. பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோ பரமாத்மநி,
ஸர்வேஷணுவிநிர்முக்த: ஸ பைக்ஷம் போக்துமர்ஹதி. (பார்ஹஸ்பத்யஸ்ம்ருதி)

*ஸர்வேச்வரனிடத்தில் ப்ரீதியுள்ளவனும் இதர விஷயங்களில் வெறுப்புள்ளவனுமானவன்எல்லா ஆசைகளையும் விட்டவனாகி பிக்ஷாந்நத்தை யுண்ணத் தகுந்தவன்.*

26. வநேபி தோஷா: ப்ரபவந்தி ராகிணும் க்ருஹேஷு பஞ்சேந்த்ரியநிக்ரஹஸ் தப:,
அகுத்ஸிதே கர்மணி ய: ப்ரவர்த்ததே நிவ்ருத்தராகஸ்ய க்ருஹம் தபோவநம்.
(இதிஹாஸ ஸமுச்சயம்)

*ஆசையை அடக்காதவர்களுக்குக் காட்டிலும் தோஷங்கள் உண்டாகின்றன; வீட்டிலும் ஐம்புலன்களை யடக்குவது தவம். விலக்கப்படாத காரியங்களைச் செய்யும் விரக்தனுக்குத் தன் வீடும் தபோவனம்.*

27. ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந:,
ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தே: ததா ப்ராப்திவிரோதி ச,
வதந்தி ஸகலா வேதா: ஸேதிஹாஸபுராணகா:,
முநயச் ச மஹாத்மாநோ வேதவேதார்த்தவேதிந:. (ஹாரீதஸம்ஹிதா)

*அடையவேண்டிய ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தையும், அடைகிற ஜீவனுடைய ஸ்வரூபத்தையும், அடையும் வழியையும், பெறுதற்குரிய பேற்றையும், இடையூறுகளையும், ஆக இவ்வர்த்த பஞ்சகத்தையே இதிஹாஸ புராணங்களுடன் கூடிய ஸகல வேதங்களும், அவைகளின் பொருளையுணர்ந்த முனிவர்களும் கூறுகிறார்கள்.*

## மூன்றாம் ச்ரிய: பதி

28. உத்திஷ்டோத்திஷ்ட கிம் சேஷே ராஜேந்த்ர மஹாயச:,
த்வத்விதா ந ஹி சோசந்தி ஸந்தஸ் ஸதஸி ஸம்மதா:. (ராமா. 2-72. 24)

*புகழ்பெற்ற அரசனே! எழுந்திரு; ஏன் படுத்திருக்கிறாய்? உன்னைப்போன்ற பெரியோர் வருந்த மாட்டார்கள். (என்று பரதாழ்வானை யெழுப்புவது.)*

29. ஏபிச் ச ஸசிவை: ஸார்த்தம் சிரஸா யாசிதோ மயா,
ப்ராதுச் சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்த்துமர்ஹஸி. (ராமா. 2. 104-12)

*இம்மந்திரிகளோடு கூடின என்னால் தலையால்வணங்கி வேண்டப்பட்ட நீர் தம்பியும் சீடனுமடிமையுமான எனக்கு அருள் புரிய வேண்டும். (என்று பரதாழ்வானது வேண்டுகோள்)*

30. ஸ காமமநவாப்யைவ ராமபாதாவுபஸ்ப்ருசந்,
நந்திக்ராமேகரோத் ராஜ்யம் ராமாகமநகாங்க்ஷயா. (ராமா. 1-1. 38)

*பரதாழ்வான் தன் விருப்பம் நிறைவேறாமலே, ஸ்ரீ ராமனுடைய பாதுகைகளை ஸேவித்துக் கொண்டு ராமன் வரவை எதிர்பார்த்து நந்திக் கிராமத்தில் அரசுபுரிந்தனன்.*

31. ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநி ச,
ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்ஸ்தம் யச்சாந்யதபி வாங்மயம் (.?)

*ருக்யஜுஸ் ஸாமாதர்வண வேதங்களும் மற்றவையுமெல்லாம் அஷ்டாக்ஷரத்தி லடங்கியவையாம்.*

**ஈட்டுப்ரவேசங்களின் பிரமாணத் திரட்டு முற்றிற்று.**
**(இனி பாசுர வியாக்கியானப் பிரமாணத் திரட்டு)**

ஸ்ரீ :

# ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷா.

ஸ்ரீ காஞ்சீ. ப்ர - அண்ணங்கராசாரியர்.

ஸ்ரீமத் வேதமார்க்கேத்யாதி ஸகல பிருதாவளி விபூஷிதர்களாய் நிலவுலகுக்குப் பர்யாய சந்த்ராஸூர்யர்களாய் விளங்கும் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்வாமிகளின் திருவடித்தாமரைகளில் சிறியேனன் நிறையொன்றுமிலேன் தலை வணக்கிக் கைகூப்பிச் செய்யும் விண்ணப்பம்.

ஸ்ரீராமாநுஜன் தனி. மலரில் ஸதுபதேச சிக்ஷா, ந்ருஸிம்ஹ ப்ரியாஸமீக்ஷா என்னுமிரண்டு வியாஸங்களை அடியேன் வெளியிட்டது உலகுக்குப் பல தத்துவங்களைத் தெரிவிக்கவேயல்லது வேறொன்றுக்காகவன்று. அதிலிருந்து ஆஸ்தாநே விவாதங்கள் எல்லை கடந்து வளர்ந்து அதிக்ராம்யமான நிந்தைகளை உத்தரமாக முடிந்தாலும் இந்த வியாஜத்தினால் பல சாஸ்த்ரார்த்த தத்துவங்கள் வெளிவந்து பண்டிதவுலகம் ஹர்ஷப்ரகர்ஷமடையப் ப்ராப்தமாகிறதென்பது அபலபிக்க முடியாததலால் லோகோபகார நிரதனை எம்பெருமானுடைய லீலைகளில் இதுவும் ஒரு விலக்ஷணலீலையே யென்று கொள்ள வடுக்கும்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் அநர்க்கமான நியமனத்தினால் வெளிவருகின்ற ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகை எவ்விதத்திலும் அவத்யலேசமுமில்லாது ஸகல விபுத ஸம்ச்லாகநீயமாய் நீடூழி விளங்கிவர வேணுமென்கிற ஓர் ஆவலையே உண்மையாகக் கொண்டு சிக்ஷாஸமீக்ஷைகளை வெளியிட்டேன். அவற்றுள் ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷையில் இரண்டாம் பக்கத்தில்

> "...... நன்கு பர்யவேக்ஷணம் செய்ய யோக்யர்களான விரகர்களை நியமித்தருளிச் சில ஒழுங்குபாடுகள் செய்தருளினால் ஜகதுபகாரம் அதிசயிக்குமே யென்று ஸவிநயம் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறபடி" என்றும், (மேலே மூன்றாவது பக்கத்தில்)
>
> "எழுதுகிறவர்கள் ஒருவாறு எழுதிவிட்டாலும் ப்ரகாசக கர்த்தாக்கள் அவச்யம் அவஹிதர்களாயிருக்க வேணுமென்று ஸ்ரீஸ்ரீஸ்வாமி அடிக்கடி நியமிக்கவும் ஸம்யகவஹிதர்களாகக் கூடிய பஹுச்ருதாதிகாரிகளைக் கொண்டு பர்யவேக்ஷணம் செய்விக்கவும் வேண்டுமென்று ஆர்ஜவத்துடன் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்"

என்றும் உள்ளவாறு எழுதியிருக்கிறேன். இப்படி அடியேனெழுதியிருந்ததை அர்த்த மற்ற வார்த்தையாகவோ அஹங்கார வார்த்தையாகவோ எண்ணி மேன்மேலும் அம்புகளையே தொடுக்க நேர்ந்துவிட்டதந்தோ!. மேலேயெடுத்துக் காட்டிய அடியேனுடைய விஜ்ஞாபனம் அர்த்தமற்ற வம்புவார்த்தையன்று, அஹங்கார வார்த்தையுமன்று; லோகக்ஷேமத்திற்காக ஆஸ்தாநாபிஷிக்தர்களால் அவசியம் ஊக்கங்கொண்டு ஊன்றி நோக்கவேண்டிய வார்த்தையே யென்பதை இப்போதும் நிரூபிக்கிறேன்.

நிகழும் தை மாதத்து ந்ருஸிம்ஹப்ரியா நேற்று கிடைத்தது. அதில் (பக்கம் 17 ஸம்பாதகரின் குறிப்பில் "இப்பத்திரிகை முன்னினுமதிகமாகத் தனது பணியிலீடுபட உறுதி கொண்டிருப்பதாக" வெளியிடப்பட்டிருப்பதுகண்டு மெய்யே உள்ளம் பூரித்தேன். ஆனால் வாசகங்களின் பரிஷ்காரம் அடியேன் கோரினபடி அமையவில்லையேயென்று மிகமிக வருந்தவும் பெற்றேன். அந்த ஸம்பாதகர் குறிப்பில் "நமது பண்டித ச்ரேஷ்டர்களின்........ஒத்துழைப்பைப் பெறுவதில் தீவ்ரமாய் முயற்சிக்கத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. எல்லா விஷயங்களையும் எல்லாரும் புரிந்துகொள்ளக்கூடிய வகையில் எளிய சிறு வியாஸங்களில் எழுதி விடுவதென்பது ஸாத்யமில்லை" என்றுள்ள இச்சிறு பகுதியை மாத்திரம் எடுத்துக்கொண்டு சிக்ஷிக்க ஆவச்யகதையுள்ளது. இந்த சிக்ஷணத்தினால் சிலர் வருந்தினாலும் உலகுக்குப் பெரு நன்மையுண்டாகுமென்பது அடியேனது முழு நம்பிக்கை. முதலில், முயற்சிக்க என்கிற சொல் தமிழ் வாஸனையேயறியாதவர்களுங்கூட அருவருக்கும்படியானது. அல்லது அன்னவர்களை உகக்கும்படியானது என்று கொள்ளலாம். முயற்சி என்கிற சொல் உண்டேயல்லது அதன் மேல் ஒரு ப்ரத்யயமேற்றி முயற்சிக்க என்பது பரிஹாஸ்யங்களிலும் கடையானது. வடமொழியில் ப்ரயத்ந:, உத்யோக:, லேகநம் இத்யாதி சொற்களின் மேல் ப்ரத்யயமேற்றி ப்ரயத்நிதும், உத்யோகிதும், லேகநிதும் என்று ஒருவர் எழுதினால் எப்படியோ அப்படியே இது. முயற்சிக்கின்றேன், முயற்சிக்கலாம், முயற்சிக்காமல் என்றிப்படி சில க்ராம்ய பத்திரிகைகளில் எழுதிவந்தவர்களுண்டு. அவர்களுங்கூட க்ரமேண ப்ரபுத்தர்களாய்ப் பரிஷ்க்ருதமாகவே யெழுதி வருகிறார்களிப்போது. இதைப்பற்றி அடியேனுடைய நீண்டதோர் வியாஸம் வேதாந்த தீபிகையில் வெளிவந்துமிருக்கிறது. (தீர்மானிக்கப்படுகிறது) என்கிற பேச்சு நியாயாலயங்களில் விலை செல்லும்; ஸம்ப்ரதாய பத்ரிகைகளுக்கு இது விபூஷணமாகுமா?

இதன்மேல் "புரிந்துக்கொள்ளக் கூடியீ" என்றதும் வெறுக்கத்தக்கது. பறித்துக் கொள்ள, அறுத்துக்கொள்ள......என்பனபோல் புரிந்துக்கொள்ள, அறிந்துக்கொள்ள என்றிப்படி யதேஷ்டமாக எழுதிவிடுவது ஆஸ்தாந பத்ரிகைகளுக்கு அழகன்று. இந்த அமைமஞ்ஜஸங்களைத் தெரிந்துகொள்ள இலக்கணப்பயிற்சியும் வேண்டியதில்லையே. இதற்குமேல்— "எழுதிவிடுவதென்பது ஸாத்யமில்லை" என்ற வார்த்தை வ்யுத்பந்நர்கள் எழுதக்கூடியதன்று. 'தேவதத்தோ யஜ்ஞதத்தோ நபவதி' என்னவேண்டுமிடத்தில் 'தேவதத்தோ யஜ்ஞதத்தோ நாஸ்தி' என்றொருவரெழுதினால் எப்படியோ அப்படியே யிதுவும். அல்ல என்பதற்கு அர்த்தம் வேறு, இல்லை என்பதற்கு அர்த்தம் வேறு. அந்யோந்யாபாவமும் அத்யந்தாபாவப்ரத்வம்ஸாபாவங்களும் ஒன்றுப்படுமோ? இக்காரியம் என்னால்செய்ய ஸாத்யமன்று. ஸாத்யமல்ல—என்னலாமே தவிர, ஸாத்யமில்லை என்றால் பொருந்தாது. ஸாத்யமென்னுஞ் சொல் தர்மமா தர்மியா? என்று விமர்சிக்கவேணும். "சக்யேந வா தவ சரீச! கிமஸ்தி ஸாத்யம்" என்கிற தேசிகதிவ்யஸூக்தியின் வியாக்கியானத்திலே அடியேனுடைய விபுலநிரூபணம் காணத்தக்கது. "இவன் யோக்யனில்லை" "இவன் விவேகியில்லை" என்றிப்படியே வழங்குவாரும், இவற்றில் அநுபபத்தி ப்ரதிஸந்தாந லேசமுமில்லாதாரும் மலிந்தவுலகில் அடியேனுடைய இந்த ப்ரஸஞ்ஜநம் மதிப்புப்பெறுமா என்பதும் ஸந்திக்தமே. *அரஸிகேஷு கவித்வநிவேதநம் சிரஸி மாலிக மாலிக மாலிக* என்பர்களே. ஆனாலும் விவேகிகள் எங்கும் என்றும் உளரென்று கொண்டு இவை விஜ்ஞாபித்துக் கொண்டபடி.

இப்படியாக நாம் சிக்ஷிக்கப் புகுந்தால் சிக்ஷணீயங்கள் அபரிமிதமானவையுண்டு. இவை லோகச்ரேயஸ்ஸுக்காகத் தெரிவிக்கப்படுபவையென்று கொள்ளாமல் எதையும் தூஷணமாகவே கருதுவது சிலருடைய இயல்பாயிருக்கின்றது. வேதார்த்த ஸங்க்ரஹ முடிவில் ஸாராஸாரவிவேகஜ்ஞா கரீயாம்ஸோ விமத்ஸரா:, ப்ரமாணதந்த்ராஸ் ஸந்தீதி என்று ஸ்வாமி பணித்த கட்டளையிலே ஸமய ப்ராப்தே எதையும் அடியேன் கூசாது விஜ்ஞாபித்துத் தீருவேன். இவற்றை அச்சுப் பிழையென்று அசசுக் கோப்பவன் தலையிலேயிட்டாலும் பிழைகளேயென்று இசைவதற்கு மகிழ்ந்து நிற்பேன்.

"இது உயர்ந்த க்ரந்தமல்லவே, ஸாமாந்ய பத்ரிகைதானே; இதில் இத்தகைய பிழைகளிருந்தாலென்ன? வாசகர்களுக்கு ஏதோ தாற்பரியம் தெரிந்து விடுகிறதன்றோ" என்று சொல்லவுங் கூடும் சிலர். 'பூதலத்தில் கடமிருப்பதனாலே' என்று சொல்ல வேண்டி "கட பூதலவர்த்ததேத்வாத்" என்று வ்யவஹரிக்கிற தார்க்கிகர்களுமுளர். யூயம் வக்தவ்யம் என்கிற பண்டிதர்களுமுளர். இவற்றாலும் தாற்பரியம் கிடைத்தே தீருகிறது. *பஹுஷு வ்யாஹரத்ஸு நேநஞ்சிதபசப்திதம் என்று திருவடி விஷயத்தில் பணித்த சக்ரவர்த்தி திருமகனார், பஹுவ்யாஹரணம் பண்ணுவார்க்கு யத்கிஞ்சி தபசப்தம் வந்தாலும் பாதகமில்லை; லகுவ்யாஹரணம் பண்ணுவார் சப்த ப்ரயோகங்களில் மிகவும் ஜாகரூகர்களாயிருக்க வேணுமென்று சிக்ஷித்தாராகிறார்—என்று சில ரஸிகர்கள் பேசுவதுண்டு. ந்ருஸிம்ஹப்ரியையில் ஸம்பாதகர் குறிப்பாக அதிஸ்வல்பமேயெழுதப்பட்டு வருகிறது. ஒன்றிரண்டு பக்கங்களுக்கு மேலிராது. அதிலும் ஜாக்ரத்தை இல்லையென்றால் இது சோசநீயமல்லவா? "ஆஸ்திகர்களனைவர்க்கும் இப்பத்ரிகையால் அநேக நன்மைகள் ஏற்பட வேண்டுமென்று பரமக்ருபையோடு ஸ்ரீ அழகிய சிங்கரால் ஆரம்பிக்கப்பட்ட இப்பத்ரிகை" என்று இத் தைமாதப்பத்ரிகையிலும் ஸம்பாதகர் எழுதுகிறார். ஸ்வாமி திருவுள்ளத்திலோ ஐச்வர்யத்திலோ ஔதார்யத்திலோ எதிலும் குறைகூற முடியாது. அபரிமிதமான பொருட் செலவுகளினால் ஸ்ரீ வைஷ்ணவவுலகுக்கு அபரிமிதமான மஹோபகாரங்களைச் செய்தருளும் ஆஸ்தானம் வேறுண்டோ? அந்த த்ரவ்யவ்யயங்கள் நன்கு பரிமளிக்கும்படி சிறிது ஊக்கங்கொள்ள வேணுமென்று அடியேன் கைகூப்பிப் ப்ரார்த்திப்பது அஸ்தாநேயன்று, ஸுஸ்தாநே ஸ்தாநே—என்பதை முன்னமும் மூதலித்தேன், இப்போது இச் சிறு விண்ணப்பத்திலும் மூதலிக்கிறேன், இன்னமும் ஸமயேஷு சோர்வும் சோம்பலுமின்றி மூதலிப்பேன். ஸதுபதேசசிக்ஷா ந்ருஸிம்ஹப்ரியாஸமீக்ஷாதிகளில் அடியேன் எடுத்துக் காட்டியுள்ள எந்த விஷயத்திற்கும் ஆர்ஜவத்துடன் விடையிறுப்பார் இல்லையே! 'வைகிறார், நிந்திக்கிறார்' என்று உத்கோஷிப்பதா வித்வான்களின் பணி? உண்மையையுணர ஸ்வாமிகளுக்கு ஆற்றல் இல்லையா? தலையெடுக்க வொண்ணாதபடி தந்த (சாஸ்த்ரீய) ப்ரஹாரங்களை ப்ரஹாரமென்று கூற வெள்கி நிந்தையென்று முறையிட்டதனால் ப்ரஹார ஹாரப்ரபை மழுங்குமோ?



ஸ்ரீ:

# சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை. 4, 5.

ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸந-தர்மப்ரசார நிதியின் சார்பாக

மாதம் மும்முறை வெளிவருவது.

ஆசிரியர் ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்,

18-1-1952

## ப்ரபத்தி ப்ரயோகம்—முன்தொடர்ச்சி.

நமது சந்திரிகையின் இரண்டாவது இதழில் "6. ப்ரபத்திப்ரயோகம்" என்ற வியாஸத்தின் தொடர்ச்சியாக இஃது எழுதப்படுகின்றது. அதில் மீமாம்ஸா சாஸ்த்ரஸித்தமான விஷயமொன்று எழுதப்பட்டுள்ளது. அது சாஸ்த்ரஜ்ஞர்களான பண்டிதர்களுக்கே நிலமானது. அவ்விஷயத்தை வித்வான்கள் மனப்பாடம் செய்துகொள்வதற்குப் பாங்காக [முன்பு தமிழ் வசனமாக எழுதியிருந்த விஷயத்தையே] இப்போது ஸம்ஸ்க்ருதச்லோகநிபத்தமாக்கித் தருகிறோம்; பிறகு சில ஆக்ஷேபங்களை நிரஸிப்போம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

"ஹுஸஹவ்ஜஷ பண்ணினவர்கள்'' என்று ஸ்ரீவத்ஸசிஹ்நமிஷ்ரவ்யாக்யாந ஸ்ரீஸூக்தி காண்கையாலே ப்ரபதநம் ப்ரவ்ருத்திரூபமாகவேயிருக்குமென்று சிலர் கொள்வதும் தவறு. ஹுஸஹவ்ஜஷமென்றால் தன்னகத்திலிருந்து பெரியதொரு மூட்டையைக் கொண்டு போய்க் கோவிலிலே வைப்பது என்று பொருளன்று. 'ஸஹம்ஷச் க்ஷணஹரோசச் க்ஷண மேடு தயா நசஉ' ஐதஹ்யவ்யாக்யானவ ஹுநயாஸ:, ஸுயஜேவது ஹுஸஹவ்ஜஷ'' என்று ந்யாஸவிம்ஶதிவ்யாக்யாநாதிகளில் நிஷ்கர்ஷம் காண்க. ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமந்ஜயேஶமும் வஹிக்கக்கடவேனல்லேனென்று ஸங்கல்பம் கொள்ளுகையே ஹுஸஹவ்ஜஷமென்னு மிடம் ந்யாஸதஶகம் முதலாக ஸகலதேசிக க்ரந்தங்களிலும் வ்யக்தம்.

ஹமவகீ ப்ரவ்ருத்தி ஹஞகநிஜோஷ்ஷ நாம ஸவாஸ நதூாமு: ।
ப்ரபதநதிவரு ஹமவணிமசாஜா அயஜஸூக்திஸவஜ்ஷஸ் ॥

இனி இவ்விஷயத்தில் பிறர் கூறும் க்ஷேபோக்திகளை ஸப்ரமாணமாக நிரஸிக்கிறோம். பகவத்ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்தியென்று ஸகல பூர்வாசார்ய ஸித்தாந்தமென்று எழுதியிருந்தோம். ப்ரபத்திதர்மிக்ராஹகப்ரமாணமான * த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:, சரணாகதிரித்யுக்தா * என்ற வசனத்தில் ப்ரார்த்தனையை ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கும்போது 'ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தி ப்ரபத்தி' என்பது எப்படிப் பொருந்தும்? என்று ஆக்ஷேபம் தோன்றியுள்ளது. இதற்கு ஸமாதானம் கேண்மின்;—

கரசரணாத்யவயவங்களின் உதவியைக்கொண்டு செய்யும் காரியம் ப்ரவ்ருத்தியெனப் படும்; அப்படி கைகால்முதலிய உறுப்புகளைக்கொண்டு செய்யும் செயல் மாண்டு ஓய்ந்து நிற்கை நிவ்ருத்தியெனப்படும். இதிஹாஸ புராணங்களில் யார்யார் ப்ரபத்திசெய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவரவர்கள் அது செய்த விதத்தை ஆராயுமிடத்து ஸ்வப்ரவ்ருத்தியிலிருந்து நிவ்ருத்தியானதுதன்னையே ப்ரபத்தியென்றதாகத் தேறிநிற்கின்றமையை நன்கு காணலாம். த்ரௌபதி ப்ரபத்தி பண்ணினாள், கஜேந்த்ராழ்வான் ப்ரபத்திபண்ணினான் என்று காண்கிறோம். இவ்விரண்டு வ்யக்திகளின் செயலைமாத்திரம் இங்கு எடுத்துக் கொண்டு ஆராய்வோம்.

(1) த்ரௌபதியானவள் பெருஞ்சபையில் துச்சாஸநனால் துகிலுரியப்பெற்று மானபங்கமடையுந்தருணத்தில் தனது இரண்டு கைகளினாலும் துகிலை இறுக்கிக்கொள்ளுகை யாகிற ஸ்வப்ரவ்ருத்தியைச் செய்துகொண்டிருந்தாள். அதனால் தன்காரியமாகாமையாலே அது பகவத் ப்ரவ்ருத்திக்கு விரோதியாயிருந்ததென்பதை யறிந்து உடனே ''இருகையும் விட்டேனோ த்ரௌபதியைப்போலே'' என்னும் பழமொழியின்படி தனது இரண்டு கைகளை யுங்கொண்டு ஏதோ செய்கையான செயலைவிட்டுத் தொலைத்து த்வாரகாநிலயனை கோவிந் தனே தஞ்சமென்று நெஞ்சிலேகொண்டுநின்றாள். பகவத்ப்ரவ்ருத்திவிரோதியான ஸ்வப்ரவ் ருத்தியின் நிவ்ருத்தியான இதுதானே ப்ரபத்தியென்று பேசப்பட்டதாகி உடனே அது கார்ய கரமுமாயிற்று.

(2) இனி கஜேந்த்ராழ்வானைப்பற்றிப் பேசுவோம். *கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே* என்னும்படியாக நெடுங்காலம் ஸ்வப்ரவ்ருத்தியிலே ஊன்றிக்கிடந்த கஜேந்த்ராழ்வான் அது பகவத்ப்ரவ்ருத்திக்கு விரோதியாகையினாலேயே கார்யகரமாயிற் றில்லையென்றுகண்டு அந்த ப்ரவ்ருத்தியில் நின்று நிவ்ருத்தியடைந்ததுதானே ப்ரபத்தியென்னப் பட்டது. *பரமாபதமாபந்நோ மநஸா அசிந்தயத் ஹரிம்* என்ற புராணவசனமும் இதையே காட்டி நின்றது. முன்பெடுத்துக்காட்டின ப்ரபத்தி தர்மிக்ராஹக வசனத்திலும் ''ப்ரார்த்த

நாமதி:'' என்று ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கின்றதே. வாசிகமாகவோ காயிகமாகவோ ஒரு ப்ரவ்ருத்தி செய்யப்படவேண்டியதாகச் சொல்லிற்றில்லை. தனக்குத்தான் தஞ்சமென்று நினைத்துப் பலகாலம் செய்துபோந்த ப்ரவ்ருத்திகளினின்றும் விலகி நீயே தஞ்சமாகக் கடவையென்று சிந்திக்கையே சரணாகதியென்று லக்ஷணவசனம் ஸுஸ்பஷ்டமாயிருக்க, அதில் ப்ரவ்ருத்திரூபமான காரியம் ஏதோ சொல்லப்பட்டிருப்பதாக நினைப்பதற்கிடமில்லை.

திருவாய்மொழியில் (9—1—7) * மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும் * என்ற பாட்டில் * சிற்றவேண்டா சிந்திப்பேயமையும் * என்றருளிச்செய்ததுவும் உயிரான ப்ரமாணம். இங்குத் திருவாறுயிரப்படியில் திருக்குருகைப் பிரான் பிள்ளான் அருளிச் செய்தது காணீர்; ''வேறு வக்தவ்யமில்லாதபடி ஸம்க்ஷேபேண ஆத்மோஜ்ஜீவநோபாயத்தை எல்லார்க்கும் சொன்னோம்; இதுக்கு அதிகாரி நியமமும் கால நியமமும் தேச நியமமுமில்லை; இவ்வுபாயந்தான் துஷ்கரமென்று குறைவு படவும் வேண்டா; ஸ்ம்ருதிமாத்ரமேயமையும்'' என்று.

இன்று இதை யெழுதும்போது கூரத்தாழ்வானுடைய திருவவதார்நன்னாளென்னுங் காரணத்தினால், பிள்ளானுடைய தமிழ் ஸ்ரீ ஸூக்தி போலவே ஆழ்வானுடைய ஸம்ஸ்க்ருத ஸ்ரீ ஸூக்தியுமொன்று ஸ்ம்ருதி விஷயமாயிற்று. அதாவது ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தில் (61.) * யத்ப்ரஹ்மகல்ப * 'இத்யாதி ச்லோகத்தில் * ஏவம் ஸதா ஸகலஜந்மஸு ஸாபராதம் க்ஷாம்யஸ்யஹோ த்தபிஸந்தி விராமமாத்ராத் * என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இதில் ''ததபிஸந்திவிராமமாத்ராத் க்ஷாம்யஸி'' என்றது உயிரான ஸ்ரீ ஸூக்தி. இங்கு அடியேனுடைய வியாக்கியான பங்க்திகளை அப்படியே யெடுத்தெழுதுகிறேன் [இந்த ஸம்ஸ்க்ருத ஸூக்தியின் பொருள் அனைவர்க்கும் எளிதாகத் தெரிவதற்காக];— ''க்ஷமிக்கைக்கு ஒரு ஹேது இருக்கவேணுமே; நிர்ஹேதுகமாக க்ஷமிப்பதென்றால் ஸர்வாபராதிகள் விஷயத்திலும் க்ஷமையுண்டாகவேணுமே; என்ன ஹேது கண்டு க்ஷமிப்பதென்னில்; [ததபிஸந்திவிராம மாத்ராத்] அபராதங்களைச் செய்து கொண்டே போந்தவன் ஒரு நாளிலே கைசலித்துக் கையொழிந்து நின்றானாகில் அந்த விராமந்தானே பற்றாசாக க்ஷமித்தருளுகிறபடி. வ்யாஜ மாத்ர ஸாபேக்ஷனுக்கு இவ்வளவு போதுமன்றோ.'' என்று.

மற்றும் பல பல பிரமாணங்களினால் * பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்தி * என்பது ஸகல பூர்வாசார்ய ஸித்தாந்தமாகத் தேறி நிற்கும். இனி ''பெரியவாச்சான்பிள்ளை பரந்த படியில் அருளிச் செய்திருக்கின்றார்'' என்றதும் தவறு. பெரியவாச்சான்பிள்ளை பணித்த பரந்தபடியொன்று கண்டிலோம். பரந்தபடி ஸூக்தியாக உதாஹரித்துள்ள பங்க்திகளில் ப்ரதிபக்ஷிஸமீஹிதஸாதகமான அக்ஷரலேசந்தானுமில்லை. மாநஸவ்ருத்தியொழிய காயிகவ்ருத்தி யொன்றும் சொல்லிற்றில்லைகிடீர். ப்ரார்த்தநா என்றிருப்பது கொண்டு மருளவேண்டா. மாநஸாத்யவஸாயமே அது.

''மாநஸமான அநுஷ்டானத்தைச் சொல்லுகிறது'' ''உபாய ஸ்வீகாரம் சொல்லுகிறது'' என்ற முமுக்ஷுப்படி திவ்ய ஸூக்திகளும் நிராலம்பந ப்ரமஜநகமானபடி யெங்ஙனேயோ அறிகிலோம். ப்ரதிபக்ஷி, தான் உபாதேயமாகக் கொண்ட ரஹஸ்யக்ரந்தங்களிலே மருண்டு நிற்பது போதாமல் ஸர்வாத்மநா தனக்கு நிலமல்லாத ஸதாசார்ய ரஹஸ்ய திவ்ய ஸூக்திகளிலும் புகுந்து மருளவேணுமோ? தேசிகனருளிச்செய்த சில்லரை ரஹஸ்யங்களென்று குலாவப்படுகிற ரஹஸ்யங்களுள் பதின்மூன்றாவது ரஹஸ்யமான ரஹஸ்யரத்நாவளியின் முப்பது வாக்யங்களும் திவ்யமான மணித்திரள். சுருங்கச் சொன்னவதற்கு ரஹஸ்யரத்நாவளீஹ்ருதய மென்று தாமே வியாக்கியானமிட்டருளி அதைப் பதினான்காவது

ரஹஸ்யமாக வைத்தருளினர். அதில் 7ஆம் விவரணம் ப்ரதிபக்ஷிக்கு நல்ல தெளிவைப் பிறப்பிக்குமது. அவ்விடத்துப் பங்க்தியாவது—"இதில் சொன்ன ப்ரபத்தி ரூபமான ஸ்வரக்ஷாபர ஸமர்ப்பணமாவது—ஸ்வரக்ஷணார்த்த ஸ்வப்ரவ்ருத்த்யபிமாந நிவ்ருத்தியோடும் ப்ரார்த்தனையோடும் கூடின சரண்யைகஸாத்ய ஸ்வரக்ஷணத்வாத்யவஸாய விசேஷம்." என்பது. இதைவிட அதிகமாக அருளிச்செய்யலாவதில்லையே.

அதேஷம் பெரியதூழ ॥ சாஸ்த்ரங்கள் "யாச்ஞா ப்ரபத்தி:" என்றும் "ப்ரார்த்தநாமதிஃ சரணாகதி:" என்றும் ஸமாநாதிகரணமாகச் சொல்லியிருக்க "ப்ரார்த்தனையோடு கூடின அத்யவஸாய விசேஷம்" என்று ஸ்வாமி அருளிச் செய்திருந்தாலும் நிர்திஷ்ட ப்ரமாணங்களுக்குச் சேர ப்ரார்த்தநாரூபமான அத்யவஸாய விசேஷம் என்றே கொள்ளவேண்டுவது போல, 'நிவ்ருத்தியோடு கூடின அத்யவஸாய விசேஷம்' என்றதும் நிவ்ருத்திரூபமான அத்யவஸாய விசேஷம் என்றே கொள்ளப்படும். எப்படியாவது கொள்ளட்டும்; இதிலொரு நிர்ப்பந்தமில்லை. தாற்பரியம் ஒக்கும்.

> நிவ்ருத்த்யாத்மகதாம்ஏவ ப்ராயச்சித்தாத்மகதாம் ததா ।
> யத்ர ப்ரவ்ருத்திரித்யேவ விஜாநோ தேசிகாஶ்ரித: ॥
> அ ஸாரு ஸாரவம் ஸ ஊஶோ ஸவீர உ த்யாதிவாஷீகி ஹிஸாம் ஸலஜ்ஞாநு
> ப்ரணஶ்ய தேஷாம் ஸாணாஜஸவெஸவாம் ஸிஸம் ஸாஸநு விஜி உஹாயஸ்தகஸ்ழ ॥
> ஜாநாதீஹ்தி யததெ க்ஷாஸதஉதி ப்ரொஅஸ்ஶா நவஸதிஷ ।
> ஶுஷ்விதயாதநுஷ்த்விதயம் நைவாத்ர ஶாத்ருயாவிஸஷ்ஶக ॥
> வஸஷாயஜஹாவஷிலைஸ்ய விவக்ஷிதா ப்ராயஸ்நாத நஹிவாதி ।
> ஸவிதஉநவெஶ்வெதி ப்ரகய நதொ நப்ரவ்ருத்திஹம்யொவி ॥

"உபாயஸ்வீகாரமெனப்படும் ப்ரபத்தியை யநுஷ்டித்த ப்ரபந்நனை அதிகாரிக்கு அதற்குமேல் ஸ்வப்ரவ்ருத்தி யொன்றும் பேற்றுக்காக வேண்டியதில்லை யென்பது பூர்வாசார்யர்களின் ஸித்தாந்தமேயன்றி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்தியென்பதன்று" என்று ப்ரதிபக்ஷிகள் எழுதியிருப்பது மிகத் தவறு. உபாயஸ்வீகார மெனப்படும் ப்ரபத்தியை யநுஷ்டிப்பதாவது என்ன? என்பதே ப்ரக்ருத விசாரத்தில் தலையாகவுள்ள விஷயம். ஸ்வீகார மென்பதும் அநுஷ்டான மென்பதும் நிவ்ருத்தி ரூபமேயன்றி ப்ரவ்ருத்திரூப மன்று என்பதை அசைக்கமுடியாத ப்ரமாணங்களினல் நாம் நிலைநாட்டி யிருக்க, இரவெல்லாம் ராமாயணம் கேட்டு விடிந்தவாறே ராமஸீதைகளுக்கு என்ன ஸம்பந்த மென்று கேட்பார் படியிலே அஸம்பத்தங்களை யெழுதிக் கொண்டிருப்பதை யாவஜ்ஜீவம் விடாமலேயிருக்க.

"ஸர்வதா அபரிசிதமான பூர்வமீமாம்ஸையில் சென்று பல அபார்த்தங்களை........." இத்யாதியை எழுதுகிறவர் யார் தெரியுமோ? "தண்டேனுகராமண்டூகம் தண்டாமரையினுடன் பிறந்தே" என்பதற்கு ப்ரதமலக்ஷ்யமாயிருப்பவராக ஜகத் ப்ரஸித்தரானவர். விஷய விமர்சத்திலன்றோ ஞான வீறு காட்ட வேணும். "ஸர்வதா அபரிசிதமான" இத்யாதியை எழுதுவதற்கு ஒரு படிப்பும் தேவையில்லை. இப்படிப்பட்ட வ்யர்த்த வாச்ஜாலங்களை யாரை நோக்கியும் யாரும் எழுதலாம். அஸ்து. இனி விஷயவிமர்சம் காணீர். ஸ்நாதகன் விஷயத்தில் * தஸ்ய வ்ரதம் * என்று உபக்ரமித்து மேலே உபஸம்ஹாரத்தில் * நேக்ஷேத ஶாதய்ஷஜாதிஹ்ஹ * என்றிருப்பதால் [அதாவது ப்ரவ்ருத்திரூபமான க்ரியையைச் சொல்லாமல் நிவ்ருத்தி சொல்லப்பட்டிருப்பதால்] இது எப்படி வ்ரதமாகும்? ஏதாவதொன்றைச் செய்யவேண்டியதாகச் சொன்னலன்றோ வ்ரதவிதியாகும்......என்கிற சங்கையின்மேல் மீமாம்ஸகர்கள் என்ன ஸமாதானம் சொன்னர்களென்னில், அநுஷ்டிக்கவேண்டியதான காரியம் இங்கு வ்யக்தமாகச் சொல்லாவிட்டாலும் நாம் கல்பித்துக் கொள்ளலாம்.

'உத்யந்தமாதித்யம் நேக்ஷேத' என்பதற்கு 'உதிக்கிற ஸூர்யனைப் பாராமலிருக்கக்கடவே னென்று ஸங்கல்பம் செய்துகொள்ளக்கடவன்' என்று பொருளாகலாம். ஆகவே ஸங்கல் பக்ரியைதான் இங்கு வ்ரதவிதியாகக் கொள்ளத்தக்கது—என்று ஸமாதானம் சொல்லிவைத் தார்கள். அதுபோல, த்வமேவோபாய......மதி:* என்று சொல்லிவைத்து *ஸா தேவேஸ் மிந் ப்ரயுஜ்யதாம்* என்று சொல்லியிருந்தாலும் * ஸந்யாஸஸ்த்வுபாயாந்தரநிவ்ருத்தி ரேவ ந ப்ரவ்ருத்திரூபம் கர்ம * என்றே இதற்குப் பொருளாதலால் ப்ரவ்ருத்தி பண்ணவேண்டியதான அவத்யம் நேராது என்பதே இங்கு விஷயம்.* இதன் மேல் ப்ரதிபக்ஷிக்கு அணுவளவும் வாய்திறக்க விஷயமில்லை. ஸ்வப்ரவ்ருத்திம் நிவர்த்ய ஸ்வப்ரவ்ருத்தி விரோதிநீம் என்று வசனம் படித்திருக்கிறதாவென்றும், இப்படியிருந்தாலன்றோ நிவ்ருத்தி ஸங்கல்பம் பொருளாகும் என்றும் ப்ரதிபக்ஷியெழுதுகிறார்.

இதற்குச் சொல்லுகிறோம். * த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:* என்றதற்கு ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திதான் அர்த்தமென்பதை கீழே தேசிக [ரஹஸ்ய ரத்நா வலீஹ்ருதய] ஸூக்தியால் நன்கு நிலை நாட்டியானபடியால் சோத்யத்திற்கு அவகாசமில்லை. இனி, தஸ்ய வ்ரதம் என்பது முன்னேயும் நேக்ஷேத...என்பது பின்னேயும் இருப்பதுபோல இங்கு இல்லையேயென்று சோத்யம் கிளரும். இது சாஸ்த்ரஜ்ஞன் செய்யக் கூடிய சோத்யமன்று. உள்ள வாக்யத்தை எப்படியும் நாம் அந்வயித்துக் கொள்ளமுடியும். அன்றியும், உபக்ரமோப ஸம்ஹாரங்களுக்கு உபக்ரமத்வேநவும் உபஸம்ஹாரத்வேநவும் ப்ராபல்ய தௌர்பல்யங்கள் கிடையாது. நிரவகாசத்வ ஸாவகாசத்வங்களினால் இரண்டுக்கும் பரஸ்பரம் யதாஸம்பவம் ப்ராபல்ய தௌர்பல்ய விநிமயமுண்டு. அதஏவ, * பௌர்வாபர்யே பூர்வதௌர்பல்யம் ப்ரக்ருதிவத் * என்னுமதிகரணம் உபக்ரம ப்ராபல்ய ஸாதகமாய் *ஸந்திக்தே வாக்யசேஷாத் * என்னுமதிகரணம் உபஸம்ஹார ப்ராபல்ய ஸாதகமாய்க் காண்கிறது. ததாஹ பட்டபாத:—"யதுக்தம் ப்ரதமம் பூர்வைர்லக்ஷணம் ப்ரபலம் ஹி தத்। நிர்ணேயத்வ நிராகாங்க்ஷம் யத்து தத் ஸோபஜீவ்யதே ॥" இதி। இது நாம் எதற்காக எழுதுகிறோமென்பதைக் கூட க்ரஹிக்கவில்லாத மீமாம்ஸகம்மந்யர்க்கு உண்மையான மீமாம்ஸகர்கள் தெளிவு பிறப்பிக்கக்கடவர்கள்.

* நேக்ஷேதோத்யந்தமாதித்யம்* என்பதற்கு முன்னே * வைஷ்ணவீம் தாரயேத் யஷ்டிம் ஸோதகஞ்ச கமண்டலும் * இத்யாதிகளும் மற்றும் பல விதிகளுமுண்டு என்றெழுதி யிருப்பது ப்ரக்ருதாநுபயோகி. ப்ரக்ருதத்தில் மீமாம்ஸித்த தாந்த்ரிகர்கள் அந்த விதிகளில் கண் செலுத்தவில்லை. தஸ்யைதத் வ்ரதம் என்று ஆரம்பித்து விதிலேசமுமில்லாமல் நிஷேத மயமாகவேயுள்ள விடங்களும் பல பலவுண்டு வேதத்தில்; தைத்திரீய ஸம்ஹிதையில் (2–5–32) * தஸ்யைதத் வ்ரதம் நாந்ருதம் வதேந்ந மாம்ஸமஶ்நீயாந்ந ஸ்த்ரியமுபேயாந்நாஸ்ய பல்பூலிதம் வாஸ: பல்பூலயேயுரேதத்தி தேவா: ஸர்வம் வ்ரதமுபயந்தி * என்றது காண்க. ஆரண்யகத்தில் * தஸ்யைதத் வ்ரதம் நாப்ஸு ஸ்நாயாத்...... இத்யாதி. இவ்விடங்களில் நிர்வாஹ ஸரணிகள் வெவ்வேறு பட்டிருக்கும். விஸ்தர: பரஸ்தாத்.

தஸ்ய வ்ரதம் என்பதைப் பூர்வ பக்ஷத்தில் தொடவேயில்லை யென்கிற வாதத்திற்கு விடையிறுக்க அவசியமில்லை. ப்ரதிபக்ஷியின் (6) பாராவில் ததாஹி என்று உபக்ரமித்து (நயனம் பண்ணுகிறோம்) என்றெழுதியிருப்பதே போதும். ப்ரதாந பூர்வபக்ஷஸித்தாந்தங்களி னிடையே அவாந்தர பூர்வபக்ஷஸித்தாந்தங்களும் உபஜீவ்யங்கள்.

ஸமீக்ஷ்ய வாக்யாநி ஸமுதாஹ்ருதம் விசித்ரதாத்பர்ய விதர்கபங்கிபி: ।
வாக்யார்த்தநிரீக்ஷணே ந ப்ரஸ்தாவ: யோஜ்யதே மயா ॥
ஜ்ஞாநமிஹாஸ்த்யம் ப்ரோக்தம் ஸ்வயம் பரமாத்மநா ।

[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
* [illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥

## விநதவிவிதபூதவ்ராதரக்ஷா-சங்காஸமாதானங்கள்.

நமது சந்த்ரிகை இரண்டாமிதழில் "5. ச்ருதப்ரகாசிகையும் தத்வடீகையும்" என மகுடம் புனைந்தவோர் வியாஸம் வெளியிட்டிருந்தோம். ஸ்ரீ பாஷ்ய மங்கள ச்லோகத்தின் இரண்டாவது பாதமான *விநத விவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே* என்பதை வியாக்கியானித் தருளின ச்ருதப்ரகாசிகா சார்யரும் (தத்வடீகாகாரரான) தேசிகனும் இன்சுவை ததும்பப் பணித்துள்ளவொரு மஹார்த்தத்தையே அதில் பன்னியுரைத்திருந்தோம். அதைப்பற்றி பகவத் ராமாநுஜ ஸம்ப்ரதாயஸ்தர்கள் மறுப்புரைக்க நினைக்கவும் ப்ரஸக்தியில்லை. விநத விவித பூதங்களை மாத்திரம் ரக்ஷிக்கை யன்றிக்கே அந்த ப்ராணிகளோடு ஸம்பந்தப் பட்டவர்களையுங்கூட ரக்ஷிக்கிறு னெம்பெருமான் என்கிற பரமார்த்தம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு மறக்கத்தக்கதோ ? இதற்கும் மறுப்பு வெளிவந்திருக்கின்றது.

* [illegible] * என்பர்கள் விவேகிகள். விவக்ஷிதமானவோர் அர்த்தத்தை நெஞ்சிற்கொண்டு சப்தங்களைத் தொடுக்கவேணுமென்பது இதன்கருத்து. ப்ரக்ருத விஷயத்தில் மறுப்புரைத்திருக்கின்ற பண்டிதரோவென்னில், ஒரு அர்த்தத்தையும் நெஞ்சிற் கொள்ளாமல் காடுபாய்ந்த சப்தராசிகளை யெழுதியுள்ளார் என்பதையுணர்த்துவோம்.

முந்துற முன்னம், நாம் எழுதியிருந்த பரமார்த்தம் அத்யந்தம் உபபந்நம் என்பதை இன்னமும் ப்ரமாணோபபத்திகளுடன் மூதலித்து விட்டு, பிறகு குசோத்யங்களைக் கழிக்கிறோம்.

ஸாக்ஷாத்தாகத் தன்னை வணங்கினவர்களை மாத்திரமே எம்பெருமான் ரக்ஷிப்பன் என்றும், அவர்களோடு ஸம்பந்தம் பெற்றவர்களை ரக்ஷிக்கமாட்டானென்றும் சிலர் நினைப்பதுண்டு. (இதற்குக் காரணம் எம்பெருமானுடைய பெருமையை யறியாமையே யொழிய வேறில்லை.) இதற்குமேல் சிறிது தெளிவு பெற்றவர்கள் என்ன நினைக்கிறார்க ளென்னில்; விநதர்களை மாத்திரமே யல்லாமல் விநத ஸம்பந்திகளையும் ரக்ஷிப்பதுண்டு; ஆனால் அந்த ஸம்பந்தம் ஸாக்ஷாத்ஸம்பந்தமேயொழிய பரம்பரா ஸம்பந்தமன்று. கத்ய பாஷ்யத்தில் "விபீஷணஸஹாகத ராக்ஷஸந்யாயேந" என்றிருக்கையாலும், * பசுர் மநுஷ்ய: பக்ஷீ வா யேச வைஷ்ணவ ஸம்ச்ரயா:* இத்யாதி ப்ரமாணங்களுக்கு இவ்வளவே [ஸாக்ஷாத் ஸம்பந்தமே]

பொருள் சொல்லப்பொருந்து மாகையாலும் பரம்பராஸம்பந்திகளை [அவர்களுடைய தனிப் பட்ட விநதியில்லாமல்] எம்பெருமான் ரக்ஷிக்கமாட்டான் என்று நினைக்கிறார்கள். ப்ரபுத்தர்களில் தலைவரான ஸ்வாமி தேசிகன் எல்லையில்லாத பரம்பரையையே திருவுள்ளம்பற்றி யருளிச் செய்திருக்கிறார் என்பதை அடுத்தபடியாகக் கல்வெட்டாய் விளக்குவோம்.

ஸம்பந்தத்தைத் தெரிவிக்குமதான ஷஷ்டீ விபக்திக்கு எவ்வளவு சக்தி என்பதை முன்னம் பார்ப்போம். "தேவதத்தஸ்ய புத்ர:, தேவதத்தஸ்ய பௌத்ர:, தேவதத்தஸ்ய நப்தா" என்றிப்படி ப்ரயோகங்கள் இருப்பதை எங்குங் காணலாம். தேவதத்தனுக்குப் புத்ரனோடுதான் ஸாக்ஷாத் ஸம்பந்தமுள்ளது; பௌத்ர-நப்த்ராதிகளோடு பரம்பரா ஸம்பந்தமேயுள்ளது. நப்தாவளவன்றிக்கே ஆயிரந்தலைமுறை கடந்தபின் தோன்றியவொரு வ்யக்தியைக் குறித்தும் 'தேவதத்தஸ்ய அமுக:' என்று சொல்லத் தடைகண்டிலோம். ஷஷ்டியொன்றே எல்லா வகையான ஸம்பந்தங்களையும் நிர்வஹிக்கின்றது. இதை மீமாம்ஸகர்கள் *ஸம்பந்த ஸாமாந்யே ஷஷ்டீ* இத்யாதிகளில் நிரூபித்திருக்கிறார்கள். ஆக, ச்ருத ப்ரகாசிகாகாரரும் தத்வடீகாகாரரும் இட்டிருக்கிற ஸம்பந்த சப்தம் ஒரு அளவுபட்ட ஸம்பந்தத்தைக் காட்டுவதன்றிக்கே அபரிச்சிந்நமான ஸம்பந்தத்தைக் காட்டத் தடையற்றதென்று முடிந்தது.

இவ்விஷயத்தை தேசிகன் ஸுஸ்பஷ்டமாக எழுதி வைத்தருளியிருப்பதை இனி விவரிப்போம். நியாஸதிலக மென்கிற க்ரந்தம் அதிவாதங்களைக் கொண்ட வெறும் ஸ்தோத்ரமன்று: மிகச் சிறந்த சாஸ்த்ரார்த்த க்ரந்தம். அதை ரஹஸ்யங்களிலும் அடிக்கடி எடுத்துக் காட்டி யருளுகிறார். அதில் * [illegible] * என்கிற ச்லோகத்தை விசேஷித்து அடிக்கடி தாமே யெடுத்துக்காட்டி "இதை அநுஸந்திப்பது" என்று நியமித்திருக்கிறார். அந்த ச்லோகத்தில் என்ன விசேஷமிருக்கிற தென்பதைத் தெரிந்துகொள்ள அருமையில்லை. தாங்கள் முஷ்டிபந்தமாகக் கொண்ட பிடியைவிட்டு இதனைக் குறிக்கொள்க. இந்த ச்லோகத்தில் மூன்று த்ருஷ்டாந்தங்கள் காட்டியுள்ளார். [அந்தோநந்த க்ரஹண வசகோ யாதி] கண்தெரியாத குருடன் கண்தெரிந்த வொருவன் கையைப் பிடித்துக்கொண்டு ஸ்வப்ராப்ய பூமியிற் சென்று சேருவதுபோல—என்று இது முதல் த்ருஷ்டாந்தம். [பங்குர் நௌகா குஹர நிஹிதோ நீயதே நாவிகேந] இருகாலுமில்லாத முடவன் ஓடக்காரனால் தோணியில் உட்கார வைக்கப்பட்டு ஸ்வப்ராப்ய பூமியிற் சென்று சேர்வதுபோல—என்று இது இரண்டாவது த்ருஷ்டாந்தம்.

இனி மூன்றாவது த்ருஷ்டாந்தமே உயிரானது. [புங்க்தே போகாந் அவிதித ந்ருபஸ் ஸேவகஸ்யஅர்ப்பகாதி:] ஒருவன் (அமாத்யன்) நெடுநாள் ராஜஸேவை பண்ணி விபுலமான பொருள்களையீட்டி நிதி சேமித்து வைத்திருந்தால் அதை [அதன் வட்டியை] அவ்வமாத்யனுடைய புத்ர பௌத்ர நப்த்ரு பரம்பரையிலே வருபவர்கள் நீண்டகாலம் அநுபவித்து வருவதுபோல-என்று காட்டி யிருக்குமிந்த த்ருஷ்டாந்தம் தேசிகன்தவிர மற்றொருவருடைய புத்திக்கு எட்டாது. இது வெகு ஆச்சரியமான த்ருஷ்டாந்தம். எடுத்துக்காட்டின சாதுர்யத்தை நினைக்க நினைக்க நெஞ்சு நீர்ப்பண்டமாகின்றது. ஸாரஸ்வாதிநீகாரர் "ஜ்ஞாநாபாவத்துக்கு முதல் த்ருஷ்டாந்தம்; சக்த்யபாவத்துக்கு இரண்டாம் த்ருஷ்டாந்தம்; உபயாபாவத்துக்கு மூன்றாம் த்ருஷ்டாந்தம்" என்றிவ்வளவே உரைத்தனர். இங்கு "அவிதிதந்ருப:" என்கிற விசேஷணத்தை ஸ்வாமி எதற்காக இட்டருளினார் என்கிற விசாரத்திலே ஒருவரும் புகுந்திலர். *புங்க்தே போகாந் ந்ருபதிஸவிதே ஸேவகஸ்யார்ப்பகாதி:* என்றாவது, ந்ருபதி ப்ரஸ்தாவமே யில்லாமலாவது ச்லோகமியற்றி யிருக்கலாமே; **அலங்கார: பரிகரஸ் ஸாபிப்ராயே விசேஷணே* என்ற லக்ஷணத்தின்படி அணிபெறவன்றோ இவ்விசேஷணமிட்டிருப்பது. ராஜஸேவை பண்ணிப் பொருள்படைத்த அமாத்யனுடைய சிசு முதலானோர் முக்திகல்பமான

போகங்களை யநுபவிக்குமிடத்தில் இந்த மக்களும் ராஜஸேவைபண்ண வேணுமென்பதில்லை; அரசனைக்கண்ணால் காண்பதுதானும் அநபேக்ஷிதம்.

ராஜஸேவைபண்ணிப் பொருளீட்டிச் சேமித்து வைத்தவனே ப்ரதாநனான வொருவன்; அவனோடு குடல்துடக்குடையா ரெல்லாரும் ராஜஸேவைபண்ணாமலும் ராஜமுக நிரீக்ஷணங்கூட இல்லாமலும் பலபல போகங்களை யநுபவிக்கக் காணாநின்றோம். இந்த த்ருஷ்டாந்தம் காட்டி யிருக்கின்ற ஆசிரியருடைய திருவுள்ளம்-எம்பெருமானையநுவர்த்தித்து ஆசார்ய ஸார்வ பௌமர் ஸம்பாதித்துச் சேமித்து வைத்த அருளென்னும் பொருளை அவருடைய அநுபந்திகள் அனைவரும் அவ்வநுபந்த மாத்ரமேயடியாக பகவதநுவர்த்தந நிரபேக்ஷர்களாய்ச் செவ்வனே யநுபவிக்கக் கடமைப்பட்டுள்ளார்கள் என்பதே.

மற்றுமொன்று குறிக்கொள்க. *காகெஹ்யொ ஊயிரக்ஷ்யதாம்* இத்யாதி ஸ்தலங்களில் சாஸ்த்ரஜ்ஞர்கள் அஜஹல்லக்ஷணையென்று கொண்டு காகவதும் ஊயத்தாவவாதகெபியோமா ஊள ஞாக்ஷணிகழ என்பர். அதுபோல *அவிதிதந்ருப:* என்னுமிடத்தில் ந்ருபபதம் தத்ஸேவகனை அமாத்யனையும் காட்டித்தீரும். ஊவிதிதநுவஷு: ஊவிதிதஸெவகஸ்ய தத்தீஹஂஹவதி. *புங்க்தே போகாநித்யாதியானவிது லௌகிக த்ருஷ்டாந்தமே யாதலால் லோகத்ருஷ்டிக்கு அநுகுணமாகவே பொருள் கொள்ள வேண்டுதலால் இது மிகவும் பொருந்தும். ராஜ ஸேவகனீட்டின பொருளைக் கொண்டு போகங்களை யநுபவிக்கின்ற அவனது வம்சத்தவர்கள் அரசனைக் கண்டிருக்க வேண்டாமை போலவே ராஜஸேவியான ஸ்வமூல புருஷனையும் கண்டிருக்க வேண்டாவே. இவ்விஷயத்தை அகாமதோபி இசைந்து தீரவேணுமே. இசையாததனால் நமக்கொரு ஹாநியுமில்லை. இசையவேண்டா. மூலத்தில் சப்தஸங்நிவேசமுள்ளவகையில்—ஆசார்ய ஸார்வபௌமரோடு ஸம்பந்தி ஸம்பந்தி ஸம்பந்தி ஸம்பந்தி...ஸம்பந்தம் பெற்றவர்களும் அநுபந்தமாத்திரமே பற்றுசாகப் பேறுபெற்றே தீருவர்கள் என்னுமிடமும். அவர்கள் அவ்வாசார்யனுடைய ஸம்பந்த மொன்றையே பெற்றிருக்கவேணும் [அதாவது மூல புருஷனைக் கொண்டிருக்க வேணும்] என்னுமிடமும் நன்கு காட்டப்பட்ட தாயிற்று.

* ஸேவகஸ்ய ஆத்மஜாதி: * என்னாதே * ஊஹஜகாதி : * என்றதிலும் ஓர் அற்புதமான அர்த்தம் அமைந்துளது. அதுதான் ஜீவநாடியானது. கேண்மின்; முன்பாதங்களில் நிர்திஷ்டர்களான குருடனும் முடவனும் வழி தெரிந்து தாமே நடக்க முடியாதவர்களானாலும் 'என்னை வழி நடத்தியருள வேணும்' என்று வாய்திறந்து இரந்து நிர்ப்பந்திக்க வல்லவர்களே யென்பது நிர்விவாதம். அங்ஙனே வாய் திறக்கவும் வல்லமையற்ற சிறு குழந்தையை [ஊஹஜகனை] முடிவாக த்ருஷ்டாந்தீகரித்ததனால், அதுபோலே நாம் ப்ரார்த்தனையும் செய்யா திருக்கவேணு மென்றும் அபேக்ஷாநிரபேக்ஷமாகத் தானே பேறு வந்தேதீருமென்றும் தெரிவித்தபடி. தேசிக திவ்ய ஸூக்தியாதலால் இன்னமும் ஆழ்ந்து ஆராய்ந்தால் சீரிய பொருள்கள் பல பெறலாகும்.

(தொடரும்)

## முக்கிய அறிவிப்பு

பிராட்டி விஷயமான சர்ச்சை, *அதிஸ் ஸர்வத்ர வர்ஜித :* என்பதைப் பற்றின சர்ச்சை முதலானவற்றுக்கு விரிவான விடைகளை அடுத்த இதழிற் காணலாம்.

ஸ்ரீ வெங்கடேஸ்வர பிரஸ், சி. காஞ்சீபுரம்.

இன்னதென்று இறையுமறியாத இவர் தம்மை வாய் மூடுவிக்க வல்லவர்களை அஜ்ஞர்களென்றும் உத்ததர்களென்றும் வைதுவிடுவதனால் என்னாகுமென்பதையு மறிகின்றிலரே. 'ஒன்று கொடுத்து ஒன்பது பெறுவது' என்ற பழமொழி பழுதாகாதபடி பெற்றிருக்கிறாரே! அதுதான் பெரும்பேறு இவர்க்கு.

இந் தைமாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில், உலகம் நிறைந்த புகழாளரான ஸ்ரீமத் திருச்சி. ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமியின் ஐககண்ட்ய வ்யாஸமொன்று முதலதாகத் திகழ்கின்றது. அதில் இரண்டாவது பாராவில்

"ஸமர்ப்பணமாவது இவ்வாத்மா அவனுக்கு சேஷமேன்று ஸம்வதிக்கை—என்று திருவாறாயிரம்."

என்று கண்ணாடிபோலெடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. "ஸமர்ப்பணமாவது தேங்காயுடைத்துப் பணப்பை யவிழ்த்துப் படாதபாடு படுகை" என்று திருவாறாயிரத்தில் எழுதி வைக்கக்கூடாதா? ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவ்ருத்தி பண்ணுகை—சேஷமென்று ஸம்வதியாதார் நிலை; அந்த ப்ரவ்ருத்தியில் நின்றும் நிவ்ருத்தனாகை சேஷமென்று ஸம்வதித்த நிலை. அதாவது த்வம் மே யென்றாவ் அஹம் மே யென்னாமல் வாய்மூடி நிற்கும் நிலை. இவ்வாறாக ஆசாரியர்கள் சிக்ஷித்திருக்க, எதையும் பாராமல் ஸ்ரீதேசிகாதிகளிடத்திலும் சென்று சேரும்படியான தூஷணைகளை யெழுதுவது, அதை வாசித்தும் பாராமல் அச்சிட்டு வெளியிட நியமிப்பது! அந்தோ! *சித்ரம் சித்ரம் பதபத! மஹச் சித்ரமேதத் விசித்ரம் ஜாதோ தைவாத் உசித கடநாஸம்விதாதா விதாதா.*

மாரீசன் முதல் தடவையாக முனிவன் வேள்வியில் தலைகாட்டி, இரண்டாந்தடவையாகத் தண்டகாரணியத்தில் தலைகாட்டி, மூன்றாந்தடவையாகப் பஞ்சவடியில் தலைகாட்டி, நாலாந்தடவைக்கு விஷயமில்லாமற்போனதாகக் கேள்வி. இங்கும் மூன்றாந்தடவையாகவே யுள்ளது. இவ்விளையாட்டு எவ்வளவுதூரம் செல்லுகின்றதென்று கண்ணுடையார் காணவேணும். ஸ்ரீகாஞ்சீ, வித்வத்வரேண்ய. இளங்காடு ரங்காசார்ய ஸ்வாமி போற்றநின்ற ரஸிக ரஸாயந—தத்வோபதேசாதிகளான பதினாறு ப்ரஹ்மாஸ்த்ரங்கள் இவர்மேல் பொற்றிக்கிடப்பது கிடக்கட்டும். பாதுகா ஸஹஸ்ரத்திலுள்ள * தத்தே முகுந்தமணிபாதுகயோ:* என்ற ஸூக்திக்கும் வாசஸ்பதிமிச்ரருடைய ஒரு ச்லோகத்திற்கும் ஸம்பந்தமேயில்லாமலிருக்க ஸம்பந்த கல்பநம்பண்ணி ஆசார்யஜயந்திமலரில் அத்யந்த விஸ்தரமாக இவர் எழுதியிருந்தது ந்ருஸிம்ஹப்ரியாஸமீக்ஷையில் (பக்கம் 3ல்) பங்கமடைந்து கிடக்கிறது. சூடுசுரணையுள்ள விவேகிகள் அதற்கு விடையிறுத்துவிட்டன்றோ மற்றொன்றில் கைவைக்கவேணும். அதுவுங்கிடக்க. திருவாய்மொழிப் பதிகங்களுக்கு ஆறாயிரப்படியிலுள்ள ப்ரமேயத்தைக் கொள்ளாமல் நம்பிள்ளை திருவடிகள் காட்டின ப்ரமேயத்தையே தேசிகன் கொண்டு தாத்பர்ய ரத்நாவளியும் ஸாரமும் இட்டருளினார் என்று நாம் நிரூபித்த யதார்த்த விஷயத்தில் இவர் அநாவச்யகமாகத் தலையிட்டு அதை மறுப்பதாகப் புகுந்து மிகவும் அஸம்பத்தமாக எழுதிவைத்து பங்கமடைந்திருக்குமது ஸௌஜந்ய ஸௌரப க்ரந்தத்தில் திசையெல்லாம் கமழ நிற்கிறது. அதனால் தம் திருமேனியில் குழக்கட்டை குழக்கட்டையாக எழும்பிக்கிடக்கின்றவற்றை சிகித்ஸியாமல் ஆநாண்டே நாயனாராச்சான் பிள்ளையை தூஷிக்கப் புறப்பட்டு விட்டால் பழையபங்கம் மறைந்திடுமோ? இவருடைய பங்க பரம்பரைகள் சிலாலிகிதமாயன்றோ திகழ்கின்றன.

முடிவாக ஒன்றே சொல்லி நிற்கின்றேன். *ஓடும் புள்ளேறி விசாரத்தில் இவர் உபாத பத்ரிகையில் [24-8ல்] நம் பிள்ளை செப்பு நெறியான திவ்ய ஸ்ரீஸூக்தியையெடுத்து தூஷித்திருப்பதை ஸ்வாமிகள் அறிந்து வைத்தும் இவரைக்கொண்டு ஸ்வஸம்ப்ரதாய ரக்ஷணம் பண்ணிக்கொள்ளப் பார்ப்பது சாலவும் நன்று. ஈடு முப்பத்தாறாயிரப்படியில் ஸ்வாமிகளுக்கு ஆச்சரியமான ஈடுபாடு என்பதெல்லாம் உலகுக்கு விளங்குகின்றதிப்போது. ஸ்வநிஷ்டோக்தி நிஷ்டாதி குநிஷ்டைகளிலும் இவரைக் கொண்டே எழுதுவித்து வெற்றிபெறப் பார்க்கலாமே.

கிம்பஹுநா? ஸ்ரீமத் ஆண்டவன் முதலான நிர்மத்ஸர மஹநீயர்கள் பரவசர்களாய்ப் புகழும்படி யமைகின்ற நமது நூல்களுக்கு அவிச்சேத ஸம்பாதகங்களாயும் அப்ரதிம சோபாவஹங்களாயுமாகின்ற எதிர்த்தலை வெளியீடுகளுக்கு நித்யஸ்ரீர் நித்யமங்களம். (ப்ர·அ.)

---

Kamala Printing Press, 106, Armenian Street, Madras-1.

ஸ்ரீ:

# சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை.

ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதீச

ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

**5 - 2 - '52**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:,

## மிக முக்கியமான விஜ்ஞாபனம்.

வாதவிவாத நூல்களில் நமக்குக் கண்ணோட்டம் வேண்டாமென்றிருப்பவர்கள் எதையும் பாராமலேயிருப்பது நலம். எதிலும் சிறந்த நூற்பொருள்கள் கிடைத்தே தீருமென்று நம்பிக்கையினால் விவாத நூல்களையும் விரும்பிப் பார்க்க ஆவலுடைய அறிஞர்கள் இதை அவசியம் நெஞ்சிற் கொள்க. ஸமீப காலத்தில் நாம் வெளியிட்ட ந்ருஸிம்ஹ ப்ரியா நிரீக்ஷணம், சாஸ்த்ராநுபந்த ஸமீக்ஷா என்ற இரண்டோடுங் கூடின சாஸ்த்ரார்த்த சந்திரிகையைப் பண்டித வுலகம் கடாக்ஷித்திருக்கக்கூடும். ஆனால், எதிர்த்தலையில் வெளிவருகின்ற பத்ரிகைகளைப் பார்ப்பவர்களெல்லார்க்கும் நம்முடைய வெளியீடுகள் கிடைத்து வருகின்றனவா என்பது ஸந்தேஹமே. ஆனால் ஒரு நிச்சயமுண்டு; அவற்றைப் பார்ப்பவர்கள் — அஸம்பத்த ப்ரலாபங்கள் தவிர வேறில்லாத இவற்றுக்கு அவசியம் அடுத்த நாளிலேயே மறுப்பு வெளிவந்திருக்குமென்று திண்ணமாக எண்ணுவர்களென்பதே. இந்த எண்ணம் அவரவர்களுக்கு சாச்வதமாகவே விளங்கவேண்டும். எதிர்த்தலைவெளியீடுகளைப் பார்ப்பவர்கள் உடனே நமக்குத் தெரிவித்துக்கொண்டால் நம்முடைய சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை முதலிய வெளியீடுகளையும் அவர்கள் கண்டுகளிக்க நேரும். ஏதோவொரு வியாஜத்தைக் கிளப்பி அடியேன் மூலமாக உலகுக்கு மஹோபகாரத்தைச் செய்விக்கவே ஸத்ய ஸங்கல்பனான சரண்யன் திடமாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறானென்பதைப் பல மஹான்கள் அறிந்துள்ளார்கள். அறியாத சிலரும் க்ரமேண அறியப் பெறுவர்கள். இதில் ஸந்தேஹமில்லை.

ந்ருஸிம்ஹப்ரியா நிரீக்ஷணத்திலும் சாஸ்த்ராநுபந்த ஸமீக்ஷையிலும் நாம் எழுதியுள்ள விஷயங்களுக்கு ஆர்ஜவத்துடன் பதில் தெரிவிக்க வேண்டியது அவசியமாயிருந்தும் அதைக் காணாதவர்களாகவே பாவனை செய்து வெவ்வேறு வ்யக்திகள் கிளம்பி ஏதோ பாமரவிப்ரலம்பகமாக எழுதி வருகிறார்கள். நம்மிடத்தில் பொய்யான விஷயங்கள் வெளிவருவதாகவும் மாயாஸீதா வ்யாபாரங்கள் நடப்பதாகவும் எழுதுகிறார்கள். இப்படியெழுதுமவர்கள் இப்போது வெளிவருகின்ற இந்த நமது சந்த்ரிகையைப் பார்த்து நாலைந்து நாளில் அல்லது பதினைந்து நாட்களுக்குள் ஸாதுவான உத்தரம் வெளியிடுவர்களாகில் அது மடத்திற்கு மிக்க கௌரவமாகும்.

யாவர்க்குமே முக்கியமாக ஒரு விஷயம் உணர்த்துகிறேன். ப்ரமாண வசனங்களில் சொற்சுவைக்குத் தக்கபடி பொருட்சுவைகளைக் கண்டறிந்து மஹாரஸிகர்களான ஆசார்யர்கள் ஒரு விசேஷம் வெளியிட்டால் அது நம்முடைய ஆசரணைக்குப் பொருந்தாமலிருக்கிறதேயென்று கொண்டு அதை தூஷிக்கவோ இல்லைசெய்யவோ அவ்சியமில்லை. பகவத் குணநுபவ மென்பது தனிப்பட்ட வொரு பாக்யம். பகவானை அல்பஸந்துஷ்டனென்று நம்பிள்ளையைக்காட்டிலும் அதிகமாக தேசிகன் உபபாதிக்கிறார். அதனால், நாம் அல்பமே செய்யவேண்டும், அநல்பம் செய்யக்கூடாது என்று ஒரு நாளும் தேறிவிடாது. எம்பெருமானை தோஷபோக்யனென்று ஸிந்தாந்தம் செய்து விடுவதனால் நாமெல்லாரும் தோஷங்களையே செய்து கொண்டிருக்க வேணுமென்று ஒரு நாளும் தேறாது. நாமிருக்கவேண்டிய ரீதியை தர்ம சாஸ்த்ராதிகளால் நன்குணர்ந்து பாபபீருக்களாய் வர்த்திக்கவேண்டியதே. இதில் ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயத்திற்குள் என்ன பேதமிருக்கிறது. நம உக்தியும் எம்பெருமானுக்குக் கனத்துத் தோற்றுகிறது என்று நம்பிள்ளை ஸாதித்த வளவால், நாம் நமஸ்காரம் செய்யவேண்டாம் என்றும் *நநமேயம் து கஸ்யசித்* என்ற ராவணனைப் போலேயிருக்கவேண்டுமென்றும் தேறுவதற்கு ப்ரஸக்தியேயில்லை. விஷய மருமமறியாதவர்கள் மருள்வதுபோலே இவரும் மருண்டு "அநுநாஸிகர்களுக்கு இப்படியும் ஒரு ஸம்ப்ரதாயமா! கேட்பாரில்லாத இப்படிப்பட்ட வொரு ஸம்ப்ரதாயத்திற்கு ஈடு எப்படி அநுகுணமாயிருக்கும்!" என்று சில பாமரர்களை மயக்கி எழுதிவிட்டால் தத்வார்த்தம் தலைகீழாகுமோ? ஒருநாளுமாகாது. நாம் 1, 2, 3,4. என்று வரிசையாக லக்கமிட்டு ஸகல விஷயங்களையும் ஸப்ரமாணமாக எழுதி வருகிறோம். ஒரு விஷயத்தையும்விடமாட்டோம். அதேலக்கவரிசையிட்டு பதிலெழுதட்டும்.

ஒன்றே பாருங்கள். *அக்நே நய ஸுபதா ராயே* என்பது உபநிஷத்துக்களில் தலையான ஈசாவாஸ்யத்தில் உள்ளதாய், தேசிகனாலும் பகவத் பரமாக வியாக்கியானிக்கப் பட்டதாய், நம்பிள்ளையினுடைய விசேஷார்த்த உபந்யாஸத்திற்கும் இலக்காய் விளங்குவது வேதாந்திகளின் கோஷ்டியிலே ஸுலபமாகத் தெரிந்திருக்கச் செய்தேயும், அது புரோஹிதர்கள் சொல்லுகிறவொரு அக்நிமந்த்ரமே யொழிய பகவத்பரமான மந்த்ரமேயன்று என்றும், நம்பிள்ளை அதைப்பற்றி யாதொரு விசேஷப் பொருளும் எங்குமருளிச் செய்ததில்லை யென்றும் ஒருவர் எழுதினால் என்ன நினைப்பது. இந்த சிரோமணியும் அண்ணங்கராசாரியர்வாக்கில் சிக்கி, உக்கி, முக்கி முடிந்தாலொழிய இவர் பண்டிதச்ரேணியில் பரிகணிதராவதற்கு விரகில்லை—என்று சரண்யன் ஸங்கல்பித்திருக்கிறான் என்றல்லது வேறென்று நினைக்கமுடியுமோ? மற்ற விஷயங்களை விட்டு இவ்வொரு விஷயத்தையே ப்ரதாநவிசாரமாகக் கொண்டு இவர் *ருஜுபுத்திதயா ஸர்வம் ஆக்க்யாது முபசக்ரமே* என்ற சக்ரவர்த்தி திருமகனர் படியிலே நின்று உத்தர முரைக்கட்டும். மாயா ஸீதா வ்யாபாரமோ மாயாராம வ்யாபாரமோ அந்ருதபாஷணமோ அஸதர்த்த நிரூபணமோயாரிடத்திலுள்ளதென்பதை விநோதரஸிகர்களான வித்வான்கள் நன்குஉணரட்டும்

ஸ்ரீ:
# சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை 6 to 9.
ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸந-தர்மப்ரசார நிதியின் சார்பாக
**மாதம் மும்முறை வெளிவருவது.**
ஆசிரியர்—ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.
**5-2-52**

# தத்வார்த்தபூஷணம்

---

अतात्त्विकार्थजटिलं तत्त्वभाषणनामकम् ।

भषणं विमृशन् वच्मि हृद्यं तत्त्वार्थभूषणम् ॥

1. ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனார் *அராவண மராமம் வா* என்று ப்ரதிஜ்ஞை செய்து ப்ரவர்த்தித்ததுபோல இன்று நாம் திடமான சபதஞ்செய்தே இஃது எழுதுகின்றோம். தத்வபாஷணமென்றொரு புத்தகம் நேற்று நமக்குக் கிடைத்தது. அதையெழுதினவர் அழகிய சிங்கர் ஆஸ்தானத்தில் பண்டித பதவியில் வாழ்பவரென்பதை நாமறிவோம். ஏதோ விஷய சர்ச்சை செய்பவர்போல எழுந்து அஸம்பத்த விஷயங்களையே யெழுதி அதிமாத்ரமான தூஷண பரிஹாஸங்களைப் பெய்திருக்கிறார். ஓர் அக்ஷரமும் விடாமல் பரிபூர்த்தியாக அவர் எழுதியதடங்கலும் அஸங்கதமென்பதை பண்டிதவுலகம் பரமானந்த பரவசமாம்படி இதோ விரிவாக விளக்கத் தொடங்குகிறேன். பண்டிதர்களுக்கு ப்ரதிபக்ஷி நிரஸநம் பண்ணுவதென்பது ப்ராப்தமே. அது பண்ணவேண்டிய முறையை *இடங்கொள் சமயத்தை யெல்லாமெடுத்துக் களைவனபோலே* (5-2-4) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தினீட்டிலே நம்பிள்ளை அதிரமணீயமாக அருளிச்செய்கிறார். வ்யக்தி தூஷணங்களை யடுக்கியும் பரிஹாஸ கதைகளை நிரப்பியும் எழுதுவது பாமரர்களுக்கும் ரஞ்ஜகமாகாது.

2. இந்த தத்வபாஷண நூலில் " இவர் எழுதுகிறார், இவர் நிந்திக்கிறார், இவர் தூஷிக்கிறார் " என்று நூறிடங்களில் வருகிறது. இன்னாரென்பதை ஒருமுறையாவது எழுதியிருந்தால் பிறகு இவர் இவர் என்றே எழுதத்தகும். ஆரம்பமே தொடங்கி இவர் என்றே எழுதுவதனால் என்ன தெரிகிறதென்னில், *ரகாராதீநி நாமாநி த்ராஸம் ஸஞ்ஜநயந்தி மே* என்ற மாரீசன் படியிலே *அகாராதீநி நாமாநி பீஷயந்தி ஸதைவ மாம்* என்றிருப்பவர் இப்பண்டிதர் என்பது நன்கு தெரிகிறதன்றோ. வ்யக்தியைத் தொடாமலே லோகபிராமமாக எழுத எண்ணமிருந்ததாகில் சிலர் என்று குறிக்கவேண்டும்; விஷயங்களை விளக்குவதோடு நிற்கவேண்டும். அந்த நன்னெறியைப் பயிற்றுவதற்காகவே நாம் சாஸ்த்ரார்த்த சந்திரிகை பிரசுரிக்கத் தொடங்கினது.

3. நாமெழுதுகின்றவற்றுக்கு மறுப்பெழுதவேணுமென்றுமாத்திரம் ஆசைப்படுகின்றார்களே யொழிய அபேத்யமான நடையில் விஷயங்களை யெழுதி நம்மை வாய்

மூடுவிக்க சக்தர்களாகின்றிலர். அதற்குக் காரணம் இவர்களுடைய வாதங்களில் ஆர்ஜவமில்லாமையே. அழகாக எழுதக்கூடிய விஷயங்களிருந்தால் நிந்தைகளில் நெஞ்சு செல்லவே செல்லாது. 'ஸ்ரீராமாநுஜன் தனிமலர்' தோன்றியதிலிருந்து இதுவரை எத்தனை விஷய சர்ச்சைகள் விளைந்தனவென்பது வித்வான்களுடைய நித்ய சிந்தனையில் இருந்தே தீரும். அவற்றில் ஒன்றுக்காவது ஸாதுவான ஸமாதானம் வெளிவந்துளதோ? ஒருவர்மாறி ஒருவராக வந்து வசவுகளையே பொழிகிறார்கள். ஊடே விஷய விசாரம் ஏதாவதிருந்தால் அது அத்யந்தம் அஸங்கதமாயிருப்பது தவிர *சிரஸா•ச்லாகதே* என்பதற்கிலக்காக அணுவளவும் கிடையாதென்பதை இதில் வரும் நிரூபணங்களினால் நன்கு அறியலாம்.

4. நமது ஸதுபதேச சிக்ஷைக்கு அடைவே உத்தரமுரைக்கப்புகுந்த பக்ஷணகாரர் "ஸ்ரீபாஷ்யகாரரால் ஏற்படுத்தப்பட்ட ஸிம்ஹாஸநாதிபதிகள் எல்லோரும்........" இத்யாதி ப்ரதமவிசாரத்தில் உத்தரம் எழுத ப்ரவேசிக்கவில்லை. நம்முடைய ஸாத்விக ஸதுத்தரத்தில் (பக்கம் 4-ல்) *ஸர்வைராசார்யபீடஸ்தைஸ் ஸர்வைரபி மடாதிபை:,ஸேவிதாங்க்ரிஸரோஜாய மத்பித்ரே நித்யமங்களம்* என்று ஒவ்வொருவரும் தனியனிட்டுத் தம்தம் அகங்களிலே உத்கோஷிக்கவும் அச்சிட்டு வைத்துக் கொள்ளவும் தடைசெய்ய வல்லாருண்டோ?" என்று நாமெழுதியிருந்ததை ஒக்குமென்று கொண்டு அதில் ப்ரவேசியாமல் நின்றது நன்றே. நாம் விசாரித்த ஒவ்வொரு விஷயத்திலும் இப்படியே இவர்கள் கைகூப்பி நிற்கவேண்டியிருந்தும் சில விஷயங்களை மாத்திரம் மறுக்க முயன்றது உண்மையில் உலகின் உயர்ந்ததொரு நன்மைக்காகவே; அதாவது—நம்முடைய தத்வார்த்தபூஷண, ஸர்வார்த்தஸித்தாஞ்ஜந சரணாகதி ஸாம்ராஜ்ய, ஸ்ரீ தத்வசோதநாதிபஹு க்ரந்தங்களவதரிப்பதற்காகவே.

5. நாம் எழுதுகிற விஷயங்கள் எதுவானாலும் ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமி திருவுள்ளம் பற்றினபடி சாஸ்த்ரப்ரமாண உபபத்திகள் மலிந்து செப்பேடும் கல்வெட்டுமாகத் திகழுமென்பது புநருக்தம். இதை ஊர்ஜிதப்படுத்துவதற்காகவே இந்த சிரோமணி போன்றவர்கள் க்ரந்தமெழுதக் கைவைக்கிறார்களென்பதை நிஸ்ஸந்தேஹமாக ப்ராமாணிகர்களுக்கு விளக்கிக் காட்ட ப்ராப்தமாகிறது. உலகில் ஒருவருடைய யோக்யதையையறியப் பலபல பங்க்திகள் பார்க்கவேண்டா. பம்பைக் கரையில் திருவடியைக் கண்ட சக்ரவர்த்தி திருமகனார் நாலிரண்டு வார்த்தை கேட்டவாறே அபரிமிதமாகக் கொண்டாடுகிறார். அதைச் சொல்லுகின்ற கம்பர் *இல்லாதவுலகத்தெங்கு மீங்கிவனிசைகள் கூரக் கல்லாதகலையும் வேதக் கடலுமே யென்னுங்காட்சி சொல்லாலே தோன்றிற்றன்றே* என்கிறார். 'சொற்களாலே தோன்றிற்று' என்னாமல் 'சொல்லாலே தோன்றிற்று' என்ற சொல்நயம் சுவைக்கத்தக்கது. அந்த ரீதியில் இந்த பக்ஷணகாரருடைய ஜ்ஞான பரீக்ஷைக்கு நிகஷோபலமொன்றே காண்மின். ததாஹி ;—

6. அஸக்ருத் இவர் எழுதுகிறார் "மாயா ஸீதையின் வ்யாபாரம் இவர் க்ரந்தத்தில் வெகு உண்டு" என்றும், "இம்மாதிரியான மாயா ஸீதாவ்யாபாரம் ப்ராமாணிக கோஷ்டிக்கு எழுதுவதற்கே அத்யந்தாநர்ஹமானது" என்றும். நாம் இதைப்பற்றி விரிவாகவே எழுத அவச்யமுள்ளது. நாம் நம்முடைய க்ரந்தங்களில் எழுதும் விஷயங்கள் மாயாஸீதாவ்யாபாரம்போல் மாயமயக்கு—இந்த்ரஜாலம் என்று சில பாமரர்களை மயக்கப்பார்க்கிறார். லக்ஷக்கணக்காக நாம் எழுதியுள்ள வியாஸங்களில் எந்த விஷயமெழுதினாலும் விரிவுக்கு அஞ்சாமலும் சோம்பாமலும் வெகு விசதமாகவே யெழுதுவது வழக்கம். இன்ன விஷயம் இன்ன இடத்திலுள்ளது, இன்ன ஆசார்யர் இன்னபடி சொல்லியிருக்கிறார் இத்யாதிகளைக் கண்ணாடிபோல் காட்டியே யெழுதுவது இயல்பு. 'இன்ன பதிப்பில் இன்ன பக்கத்தில் இன்ன வரியில்' என்றுகூட அனேக விஷயங்களில் எடுத்தெழுதுவதுண்டு. நாம் எழுதுகிற விஷயங்களைப் பலர் ஆவலோடு ப்ரதீக்ஷித்து ஆராய்ச்சியுடனும் பார்ப்பதுண்டாகையால், எடுத்தாலும் விஷயங்களில் மாயமயக்கு ஈஷத்தும் செய்ய இயலாது. உலகமெங்கும் பரவியிருக்கின்ற நம்முடைய பல நூற்றுக்

கணக்கான நூல்களுள் ஒன்றையும் பாராமல் ஸஹஸா எதிரம்புகோக்கவெழுந்த இந்த பஷணகாரர் "இவருடைய க்ரந்தங்களில் மாயாஸீதாவ்யாபாரம் வெகு உண்டு" என்று எழுதிவிட்டால் நம்மிடத்தில் மாத்ஸர்யமுள்ளவர்களுங்கூட இந்த அபசப்தத்தை ஸஹிக்கமாட்டார்களே. அஸ்து. விஷயத்தினுட்புகுந்து விளக்குவோம்.

7. நமது ஸதுபதேச சிக்ஷையில் (பக்கம் 11-ல்)

> *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிற ச்ருதிவாக்கியத்திற்கு "பூயிஷ்டாம் நம உக்திம் தே விதேம" என்கிற அந்வயமும் அதற்குரிய பொருளுந் தவிர வேறு அறியார்கள் நவீனர்கள். இவ்வந்வயம் நம்பிள்ளை கோஷ்டியில் தலைகாட்ட ப்ரஸக்தியில்லையே. **தே பூயிஷ்டாம் நமஉக்திம்** —உனக்குக் கனத்துத்தோன்றும் நம உக்தியை ;—உன் கருத்தாலே பொறுக்கொணுச்சுமையான நம உக்தியை என்றன்றோ நம்பிள்ளை யருளின பொருள். அடியார்கள் வாக்கிலே **நம:** என்கிற சொல் வந்தாலும் அதை மலை சுமந்ததாக நினைப்பவனும் எம்பெருமான். இந்தப் பொருளில் எங்களுக்கு என்ன பாதகம்? என்பர் உபதேசகாரர், அசட்டுச் சிரிப்புடனே சொல்லிக் கொண்டிருக்கலாம்.

என்று நாமெழுதியிருக்கிறோம். இதன்மேல் பஷணகாரர் (பக்கம் 17-ல்) :

> "ஔபாஸநாந்தத்தில் (அக்நே நய) என்றாரம்பித்து *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* இத்யந்தமான அக்நிவிஷயகமான உபஸ்தாநமந்த்ரம் படிக்கப்பட்டிருக்கிறது. இது ஸாக்ஷாத் பகவத் விஷயகமன்று. *அபரிமித க்ருத்வஸ் தே நம:* என்கிற வாக்யத்தை யநுஸரித்து இங்கும் (பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம) என்று அர்த்தங்கொள்வதே அத்யந்தமுசிதமாகும். வேறுவிதமான அர்த்தங்கொண்டால் விருத்தமாக முடியும்."

என்று மனம்போனபடியெல்லாம் எழுதிவிட்டு, "தே பூயிஷ்டாம் நமஉக்தியென்று அந்வயிக்கவேணுமென்று நம்பிள்ளை எங்கே சொல்லியிருக்கிறார்? ஆச்சான் பிள்ளை சொல்லியிருக்கிறாரா, நம்பிள்ளை சொல்லியிருக்கிறாரா?......இம்மாதிரியான மாயாஸீதாவ்யாபாரம் அநர்ஹமானது" என்றெழுதியுள்ளார். இவர் வேதாந்த வித்வானென்று நிர்ப்பயமாய் விருது வெளியிட்டுக்கொள்ளுகிறார், அந்தோ! என்ன வெட்கக்கேடு. இதைப்பற்றி விரிவாகக் கேளுங்கள்.

8. *அக்நே நய ஸுபதா* என்கிற மந்த்ரம் ஈசாவாஸ்யோபநிஷத்தில் முடிவான ருக்கு ப்ருஹதாரண்யகத்திலும் ஏழாமத்தியாயத்தின் முடிவானது. அதுகிடக்கட்டும். ஈசாவாஸ்யோபநிஷத்திற்கு ஸ்வாமி தேசிகன் பாஷ்யமருளிச் செய்திருக்கிறார். ஸ்வாமியின் அவதாரிகை "அக்நி சப்தவாச்யம் பகவந்தம் ஸ்வாபேக்ஷிதம் ப்ராபயேத்யாஹ" என்றே. மேலே விவரணமும் காணீர் :— "(அக்நே !) அக்நி சரீரக !. *யஸ்யாக்நிச் சரீரமிதி அந்தர்யாமிப்ராஹ்மணம். *ஸாக்ஷாதப்யவிரோதம் ஜைமிநிரிதி'ந்யாயாத் அக்ரநயநாதிகுணயுக்த! இதி வா." என்று கதிராயிரமிரவி கலந்தெரித்தாற் போன்ற விளக்கமான விவரணமுள்ளது. இப்படியிருக்க, இது ஔபாஸநமந்த்ரமென்றும், ஸாக்ஷாத் பகவத் விஷயகமன்று என்றும் எழுதிவிட்டு வேதாந்த வித்வானென்று வெடிபோடுகிறார். ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தின் கதி இதுவாயிற்று. இனி திராவிட வேதாந்தத்தின் கதியையும் பார்ப்போம்.

9. *பூயிஷ்டாமித்யாதிக்கு ஆச்சான் பிள்ளை அபார்த்தம் எழுதியிருப்பரேயொழிய நம்பிள்ளை யெழுதியே யிருக்கமாட்டாரென்றுகொண்டு உறுமுகிறார். உபய வேதாந்தங்களிலும் கனமகர குண்டலமணிந்து விளங்குமழகுக்கு ஆலத்திவழிக்க வம்மின்புலவீர். ஒன்பது வருஷங்களுக்கு முன்பு

நாம் எழுதி வெளியிட்டுள்ள விசேஷார்த்தரத்ந நிதியில் இருபத்தினான்காவது ரத்னம் *பூயிஷ்டாம் தே விசேஷார்த்தம். அதை அப்போதே வாசித்துப் பார்த்த மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி ஆனந்தம் பொங்கி விம்மியழுது நம்முடைய உபந்யாஸ கோஷ்டிக்கு ஓடிவந்து "அடியேன் ஈடுஸேவித்திருந்தும் ஈடு ப்ரவசநம்பண்ணியிருந்தும் அந்தோ! இந்த மஹாநிதியை இன்றளவும் க்ரஹியாமற் போனேனே! என்று மிக்க பெருஞ்சபை நடுவே பேசியிருப்பனகள் பேர்க்கவும் போராவே.

10. அந்த வாஸுதேவாசார்ய ஸ்வாமி இப்போது ஸேவை ஸாதியாமல் பரமபதித்தவராதலால் மறைந்து போனவர்களைப்பற்றி எது எழுதிக்கொண்டாலும் கேள்வியில்லையன்றோவென்றும், இது வீண் டம்பமான வார்த்தையே யொழிய ஸத்யமன்று என்றும் பக்ஷணகாராதிகள் ஸஹஸா சொல்லிவிடக்கூடும். ஸஸாக்ஷிகமாக நிரூபிக்க முடியாத விஷயங்களை நாம் தீவ்ரமாக எழுதமாட்டோம். கேண்மின்; அந்த வாஸுதேவாசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் உபயவேதாந்த காலக்ஷேபஞ் செய்த, மஹான் ஸ்ரீ உவே. அப்பா ஸ்ரீநிவாஸய்யங்காரென்பவர் நெடுநாள் டில்லியில் வஸித்து ஒரு வருஷமாய் (திருவையாறு ஸமீபம்) கல்யாணபுரத்தில் வஸித்து வருகிறார். இவர் ஜ்ஞான வ்ருத்தர்மாத்திரமல்லர், வயோ வ்ருத்தருமாவர். 73 திருநக்ஷத்திரமுள்ளவர். இந்த ஸ்வாமி வாஸுதேவாசார்யஸ்வாமியிடம் காலக்ஷேபம் செய்தவரென்றபோதே மடத்து ஸம்ப்ரதாயஸ்தரென்பது புநருக்தம். இவர் பக்ஷணகாரருடைய பக்ஷணங்களைக் கண்டு அதிமாத்ரம் திருவுள்ளம் நொந்து (கல்யாணபுரத்திலிருந்து) நேற்று ஸாதித்த ஸ்ரீமுகம் இன்று கிடைத்திருக்கிறது. மிக விரிவான அந்த ஸ்ரீமுகத்திலிருந்து ப்ரக்ருதோபயோகியான சில வார்த்தைகளையே இங்குக் குறிப்பிடுகிறேன்.—

"அடியேனுசார்யர் ஸ்வாமி வாஸுதேவாசார்ய ஸ்வாமி முந்தி ஒரு ஸமயம் ஈசாவாஸ்யோபநிஷத்து 18-வது மந்த்ரத்தின்* பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிற வாக்யத்துக்கு பத்ரிகையில் அர்த்தம் ஸாதித்தபோது தேவரீர் திருமுகத்திலிருந்து அதிரமணீயமான வொரு பொருள் கிடைத்ததால் அந்த ஸ்வாமி அதைக் கடாக்ஷித்து அத்யந்தம் த்ருப்தராய் அளவில்லாத ஆனந்தமும் விஸ்மயமுமடைந்ததை அடியேன் நேரில் அநுபவித்தவன். ஆத்ம குணபூர்த்தியுள்ள அப்படிப்பட்ட மஹான்களே ஸ்ரீஸூக்திரஸமறிந்து உள்ளபடி கொண்டாடுவர்கள்.........தேவரீர் ஸஞ்சிகைகளில் எழுதும் விஷயங்கள் மனச்சாக்ஷிக்கு ஒருபோதும் விரோதமாக இல்லாமல் பொருத்தமாக இருப்பது புகழத்தகுந்தது. இதரஸம்ப்ரதாய ஸ்தர்கள் மனம் வருந்தும்படியாகவும் அநாவச்யகமாவும், ஏற்கெனவே தீர்ந்த விஷயங்களைப்பற்றி ஸஞ்சிகைகளில் எழுதாமலிருக்கும்படிக்கு அடியேனுடைய ஸுஹ்ருத்தொருவர் திருவள்ளூர் போய் ஸந்நிதியில் விஜ்ஞாபித்துக்கொண்டிருக்கிறார். அடியேனும் பத்திரிகாசிரியருக்கு ஒரு விஜ்ஞாபனம் எழுதிக்கொள்ளத் துணிந்திருக்கிறேன்." என்று. இனி ப்ரக்ருத விஷயம்.

11. நமது விசேஷார்த்தரத்நநிதியில் 88 to 92 பக்கங்களிலுள்ள பங்க்திகளிவை காணீர்;—

## "பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம"

ஈசாவாஸ்யோபநிஷத்தில் [பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம] என்கிற பாதத்திற்கு "அளவற்ற நமஸ்காரோக்தியை உனக்குச் செய்வோமாக" என்று சிலர் பொருள் கூறுவர். இதற்கு நம்பிள்ளை ரஸவத்தரமாக அருளிச் செய்யும் அர்த்தம் விலக்ஷணமானது.

இந்த ருக்கின் ஆரம்பம் [அக்நே நய ஸுபதா ராயே அஸ்மாந்] என்பது. ஆகவே, அக்நிதேவதையை நோக்கிச் சொல்வதுபோல் தோன்றினாலும் உண்மையில் பரம புருஷனே இங்கு விஷயமாவான். அக்நே!

என்றது அக்நிக்கு அந்தர்யாமியானவனே! என்றபடி. [அக்ரம் நயதீதி அக்நி:] என்கிற வ்யுத்பத்திவழியால் ஸாக்ஷாத்தாகவே பரம புருஷனைச் சொல்லிற்றாகவுமாம். *ஸாக்ஷாதப்யவிரோதம் ஜைமிநி:* என்ற ப்ரஹ்ம ஸூத்ரமுமறிக.

இதில் "பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம" என்பதற்கு 'மிக அதிகமான நம உக்தியை உன் விஷயத்திலே செய்யக்கடவோம்' என்கிற பொருள் அஸங்கதமன்று; அது சப்த லப்யமே யாகும். [ஆவ்ருத்திதோ பூயஸீம் நம உக்திம் விதத்மஹே] என்று தேசிகன் வியாக்யானம் செய்தருளி யுள்ளார். நமோநம: நமோநம: என்று பலகால் சொல்லுவதே ஆவ்ருத்தி யினால் பூயிஷ்டமான நம உக்தியாகும். இங்ஙனே வியாக்யானம் செய்வதைக் காட்டிலும் எம்பெருமானுடைய தன்மைக்குப் பொருத்தமாக வியாக்கியானம் செய்தருளவேணுமென்று திருவுள்ளம்பற்றிய நம்பிள்ளை விலக்ஷணமாக வியாக்யான மருளியுள்ளார். ஆழ்வாருடைய திவ்யஸூக்தியும் அதற்குக் கைகொடுத்தது.

நம்பிள்ளை திருவுள்ளம்பற்றின பொருள் எங்ஙனே யென்னில்; நம: என்கிற உக்தியானது எம்பெருமானுக்குக் கனத்துத் தோற்றுவதாக அவர் கொண்ட பொருள். உள்ள சொல்வடிவில் இப்பொருள் எங்ஙனே கிடைக் கிறதென்று விமர்சிக்கவேணும். "பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம" என்று அந்வயங் கொண்டால் முந்துறமுன்னம் உதாஹரித்த பொருள் கிடைக்கின்றது. "தே பூயிஷ்டாம் நம உக்திம் விதேம" என்று அந்வயம் கொள்ளுமளவில் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றின விலக்ஷணப்பொருள் கிடைக்கின்றது. எங்ஙனேயென்னில், **தேபூயிஷ்டாம்**—உன் மனத்தால் கனத்ததான என்றபடி.

இப்பொருளை உள்ளத்தில் நன்கு பதியவைக்கிறோம். ஸ்ரீராமாயணத் தில் [அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்யமுபாகத:] என்பது இளைய பெருமாள் வாக்யம். இதற்குப் பெரும்பாலோர் சொல்லும் பொருள் யாதெனில், 'நான் இவருடைய (ஸ்ரீராமருடைய) இளையதம்பி; குணங்களி னால் அடிமைப்பட்டிருக்கிறேன்' என்பதாம். நம்பிள்ளை யருளிச்செய்யும் பொருள் இங்ஙனே யன்று; திருவாய்மொழி முதற்பாசுரத்தின் ஈட்டு அவதாரிகையில்—

"*அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்ய முபாகத:* என்னுமா போலே. இளையபெருமாளை நீர் இவர்க்கு என்னுவீரென்ன, அவர், பெருமாளும் ஒருபடி நினைத்திருப்பர், நானுமொருபடி நினைத்திருப்பே னென்றார். அவர் நினைத்திருக்கும்படி என்? நீர் நினைத்திருக்கும்படி என்? என்ன; அவர் தம் பின்பிறந்தவனென்றிருப்பர், நான் அவர் குணங்களுக் குத் தோற்று அடியேனாயிருப்பன் என்றாரிறே." என்றருளிச் செய்யப் பட்டுள்ளது.

"அஹமஸ்யாவரோ ப்ராதா" என்ற மூலத்திற்கு இங்ஙனம் பொருள் படுவது எங்ஙனம்? என்று மிகப்பெரிய வித்வான்களும் திகைப்பர்கள். **அஸ்ய** என்பதற்கு **அஸ்ய புத்த்யா**—இவருடைய நினைவினால் என்று பொருள். [நையாயிகஸ்ய வாயு: அப்ரத்யக்ஷ:] என்றால் நையாயிகன் கண்ணுக்கு வாயு தென்படாது என்று அர்த்தமன்றே; நையாயிகனுடைய மதப்படிக்கு வாயு அப்ரத்யக்ஷம் என்று பொருள்படுவதுதானே சாஸ்த்ரஜ்ஞ கோஷ்டியில் ஸம்ப்ரதிபந்நம். [லோபச் சாகல்யஸ்ய] என்பதொரு பாணிநி ஸூத்ரம். சாகல்ய மஹர்ஷிக்கு லோபமென்று பொருளன்றே; சாகல்ய மஹர்ஷியின் மதப்படியே லோபம் என்றுதானே பொருள். அதுபோலவே '**அஸ்ய அவரோ ப்ராதா**' என்றது, இவருடைய எண்ணப்படிக்கு நான் தம்பியாகிறேன்; என்னை இவர் தம்பியாக எண்ணியிருக்கிறார் என்றபடியாம்.

இவ்வண்ணமாகவே ப்ரக்ருத ஸ்தலத்திலும் **தே பூயிஷ்டாம்** என்பதற்கு 'உன் எண்ணப்படி கனத்ததான' என்று அர்த்தமாகக் குறையில்லை. அதாவது—உனக்குக் கனத்துத் தோற்றும்படியான—என்றதாகும். பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்தில் "அஞ்ஜலிபரம் வஹதே" என்றருளிச் செய்கிறார். ஓர் அஞ்ஜலியை பாரமென்றதும் அதை இந்த எலியெலும்பன் சுமக்கிறானென்றதும் என்ன திருவுள்ளத்தாலே? என்று ஆராயவேணும். அத்தலையில் நினைவாலே இது கனத்த பாரமாகவே தோற்றுமென்று மருமமறிந்தன்றோ பட்டர் அங்ஙனே அருளிச்செய்தது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் "தொழுது மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு எழுது **மென்னு மிது மிகை** யாதலின்" என்கிற பாசுரத்தினால் ஆராதநத்தில் உத்யோக மாத்ரத்தையும் எம்பெருமான் பூயிஷ்டமாகக் கொள்ளுகிறானென்பதை ஸ்பஷ்டமாகக் காட்டியருளினர்.

அதுவன்றியும் *ஒழிவில் காலத்திருவாய்மொழியில் "வேங்கடத் துறைவார்க்கு நமவென்னலாங் கடமையது சுமந்தார்கட்கே" என்றருளிச் செய்கிறாராழ்வார். "நம உக்தியைச் சொன்னவர்களுக்கு" என்று விவக்ஷித மான இவ்விடத்தில் "அது **சுமந்தார்கட்கே**" என்று அருளிச்செய்தது ஏன்? என்று ஆராய்ச்சி செய்தருளின நம்பிள்ளை—"இவன்பக்க லுள்ளத்தைக் கனக்க நினைத்திருக்கு மவன்கருத்தாலே" என்று அருளிச்செய்து அதற்கு ஸம்வாத ப்ரமாணமாக "**பூயிஷ்டாம்**" என்கிற விதனை உதாஹரித்தருளியுள்ளார். அவ்விடத்தில் உரைகாரர் [தே பூயிஷ்டாம், நம உக்திம்— உக்தி: நம இத்யேதாவந்மாத்ராபி பகவதபிப்ராயேண பூயிஷ்டா பவதீதி அர்த்த:] என்று விவரித்துள்ளார். மூநித்ரய ஸம்பிரதாயத்தில் தலைவரான ஸாக்ஷாத்ஸ்வாமி என்பவரும் தம்முடைய திருவாய்மொழியுரையில் இதே யிடத்தில் இந்த ச்ருதிவாக்கியத்தையே உதாஹரித்து இங்ஙனமே அர்த்தம் நிரூபித்துள்ளார்.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (202) "இருத்து மெண்டானாய்" என்கிற சூர்ணையின் வ்யாக்யானத்தில் மணவாளமாமுனிகளும் இவ்வர்த்தத்தை எடுத்துக்காட்டி யருளினர்.

“செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதித்தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே” என்று தேசிகனருளிச் செய்தபடியே திருவாய்மொழியோடு இணங்கவேயன்றோ ச்ருதிக்கு அர்த்தம் கொள்ளவேணும்; ஆகவே “தே பூயிஷ்டாம்” என்கிற அந்வயம் கொண்டு நம்பிள்ளை காட்டியருளும் பொருள்தானே ப்ராமாணிகர்களின் திருவுள்ளத்திற்குப் பாங்காயிருக்க வடுக்கும்.

* * * * *

12. ஆக இவ்வளவும் நாம் விரிவாகவும் விசதமாகவுமெழுதி வெளியிட்டிருக்க, அஜாகளஸ்தநமானவிவர் மாயாஸீதாவ்யவஹாரமென்றால் என்ன அர்த்தம்? சில மாதங்களாகத் திருவள்ளூரிலிருந்து வெளிவரும் பிரசுரங்கள்—தத்ராபி மாலோல முத்ராலயத்தில் அச்சாகி வெளிவருமவை ஒருவரிருவரால் எழுதப்படுமவையல்ல; திருத்தேரிழுக்கவல்ல ஸ்வாமிகள் திரண்டு எழுதுமவை. ஆஸ்தானத்திலும் அரங்கேற்றமாகி வெளிவருமவை. இத்தகைய வெளியீடுகளில் இப்படியிருந்தால் என்னென்பது? மாலோல ஸதஸ்ஸுக்கு எழுந்தருளியிருந்த *மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றுவரும் என்னும்படியான மஹான்கள் யாவரும் இந்த தத்வபஷணத்தைக் கண்டும் கேட்டு முகர்ந்தார்களாம். (அக்நேய) என்பது அக்நியின் உபஸ்தாநமந்த்ரமேயொழிய ஸாக்ஷாத் பகவத் விஷயகமன்று என்றும், இதை பகவத் விஷயகமாக்குவதும் அதற்குமேல் பொருந்தாத பொருளைக் கூறுவதும் ஆச்சான் பிள்ளையின் பணியாகத்தானிருக்கவேண்டுமென்றும் வெகு துணிச்சலாக எழுதுவதை ஒரு மடம் அபிநந்திக்கிறதென்றால் இதனில் மிக்கோரயர்வுண்டே. *த்ரிம்சத்வாரம் ச்ராவித சாரீரக பாஷ்ய:* என்றதற்கும் மேலாக உபய வேதாந்த ப்ரவசநம் ஓய்வின்றி நடந்துவருகிறதென்றும், நம் ஸ்வாமிகளின் காலக்ஷேபத்தை *பம்போபவநமாருத காலக்ஷேபமாக இவர் எண்ணியிருக்கிறார்போலுமென்றும் அநவஸரமாக எழுதினவற்றுக்கு நாம் சிறிதேனும் மறுப்புரைக்க அவசியமுளதாவென்று பாருங்கள்.

13. இவ்வளவோடும் நில்லாமல் (பக்கம் 5-ல்) “இவர் தானெழுதும் வ்யாஸங்கள் தோறும் நாலு வரிகளில் வடகலை பாகவதர்களை தூஷிப்பதும் அதில் ஏதோ விஷயத்தை ஸாதித்ததாக எண்ணி அதற்கு ப்ரமாணம்போல் தமக்கு ஜ்ஞாதார்த்தமில்லாத சில ஈட்டு வாக்கியங்களையும் ஸ்ரீதேசிக ஸ்ரீஸூக்திகளையும் எடுக்கிறது வழக்கம்” என்று அச்சமும் கூச்சமுமின்றியெழுதுகிறார். “தமக்கு ஜ்ஞாதார்த்தமில்லாத” என்கிற அஸம்பத்தவாசகத்திற்கு *கடபூதலவர்த்ததேத்வாத் என்னும் ஸ்ரீஸூக்திக்குப்போலவே ஒரு தாத்பர்யம் தெரிந்து கொள்ளத் தடையில்லையே. இந்த மஹாபசாரம் இவர்க்கு *இஹைவ பலமச்நுதே* என்றபடி கைமேலே பரிபவபலனளித்தபடி பாரீர். ஸாக்ஷாத் ஸ்வாமியென்பவர் ஈட்டுக்கு இட்டுப்பிறந்தவரல்லர்; அப்படியிருந்தும் அவர் ஈட்டின் சுவடறிந்து *அது சுமந்தார்கட்கே* என்றவிடத்தில்—“*பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிறபடியே ஈச்வரபுத்தியாலே இத்தைச் சுமையாகச் சொல்லுகிறார்” என்று ஸாரமாக எழுதிவைத்தார். மட ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த ஸ்ரீகேசவசடகோபஸ்வாமி யென்பவர் வீணாக ஈட்டைப் புறக்கணித்து *அந்யமித்ரம் கரிஷ்யாமியாகச்செய்த (ப) என்கிறவொரு பரிஹாஸ்யடீகையிலே அதேயிடத்தில் “(சுமந்தார்கட்கே) *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிறபடியே அநுஷ்டித்தவர்களுக்கு” என்றெழுதியுள்ளார். இவர் *பூயிஷ்டாமென்கிற ப்ரமாணத்தை மாத்திரம் உபாதாநம் செய்துவிட்டாரேயொழிய ஈட்டின் சுவடறிந்து எழுதினவரல்லர். சுவடறிந்தே யெழுதியுள்ளாரென்றால் பரமஸந்தோஷமே. பஷணகாரர்க்கும் இவர் தலைசாய்க்குமிடங்களுக்கும் *உபர்யுபரி ஸஞ்சரதா

மத்ருச்யம் மாயாநிகூடமநபாயமஹாநிதிம்* என்று ஸ்வாமி தேசிகனருளிச்செய்த கணக்கிலேதான் ஈடு உள்ளதென்பது தெளிவாயிற்று.

14. இந்த பக்ஷணகாரருடைய பக்ஷணங்களில் இவ்விஷயம் அல்பஜ்ஞர்களும் பரிஹஸிக்கத் தகுந்ததென்பதை மடம் ஸ்வாமிகள் உணராமற் போகார்கள். ப்ராமாணிகத்வமும் ஆர்ஜவமுமுளதாகில் அவர்கள் முன்னம் செய்யவேண்டிய காரியமென்ன? தம்முடைய மடத்திலிருந்து இப்படியொரு அஸம்பத்த ப்ரலாபம் வெளிவந்ததேயென்று அநுதபித்து அவ்வநுதாபத்தை உலகமறிய வெளியிடுவதே உரியது.

15. *ஸம்பாவநா யஸ்ய ஹி காலகூட:* என்று புகழ்ப்பெற்ற ஸ்வாமி தேசிகன் க்யாதிலாபபூஜா பேக்ஷையற்றவரென்பது நிர்விவாதம். தமக்கொரு மதிப்பு தேடிக்கொள்ளக் கனவிலும் கருதாதவர். டம்பகந்தமுமற்றவரான அவர் *அகணி ஸதஸி ஸத்பிர் யஸ் ஸமஸ்யாஸஹஸ்ரீ கவிகதகமரு கேந்த்ரஸ் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர:* என்று தம்முடைய ப்ரக்யாதியை ப்ரபலமாகப் பேசிக்கொண்டாரென்றால் இதற்கொரு காரணம் அவசியம் இருந்து தீரவேண்டும். தம்முடைய பாண்டித்யத்திலும் ஸாமர்த்தியத்திலும் க்ரந்தங்களெழுதும் சாதுர்யத்திலும் பிறர் குறை கூறியிருக்கவேண்டும்; அங்ஙனம் குறை கூறுவது அஸூயாதிகளாலத்தனை யென்றும், உண்மையில் தம்முடைய பாண்டித்யமோ ஸாமர்த்தியமோ லோகோத்தரமானதென்றும் ஸ்தாபிக்க வேண்டியே, ஸத்துக்கள் பெரிய திரளிலே தம்மைப் பலவாறு புகழ்ந்திருக்கிறார்களென்கிற விதனை யெடுத்துக்காட்டி அஸூயுக்களை வாய் மூடுவித்தார். *அகணி ஸதஸி ஸத்பி:* இத்யாதி ச்லோக ரச்னை தம்முடைய பரம ஸாத்விக ப்ரக்ருதிக்கு விருத்தமாயிருக்கச் செய்தேயும் கூசாது கூறி வைத்ததற்கு இதுவே காரணமென்பர் பெரியோர்.

16. ஸமஸ்யாஸஹஸ்ரீத்யாதிகளான விருதுகளையளித்து ஸ்வாமியை ஸத்கரித்த ஸத்துக்கள் யாவர்? 'ஸதஸி' என்று ஸாதிக்கும்படியான ஸதஸ்ஸு எப்போது எவ்விடத்திலே யார் கூட்டினது? அதற்குத் தலைமை வஹித்தவர் யார்? என்று விமர்சிக்கப் புகுந்தால் நமக்கு விஷயமொன்றும் விளங்குகின்றதில்லை. தேசிக வைபவ ப்ரதிபாதகமான எந்த க்ரந்தத்திலும் இதைப்பற்றின இதிஹாஸமொன்றும் அறிய ப்ராப்தமாகிறதில்லை. பிறர் சொல்லாவிட்டாலென்ன? ஸ்வாமி ஸாதிப்பது போதாதா நமக்கு. அந்ருத பாஷணத்தைக் கனவிலுமறியாதவர் ஸாதித்திருப்பதில் விப்ரதிபத்திலேசமுமுடையோமல்லோம். ஆப்ததமரான ஸ்வாமி ஸாதித்தது என்கிற காரணத்தினாலேயே அதை நாம் விச்வஸிக்க வேண்டியிருக்கிறதே யல்லாது, ஸதஸ்ஸில் அப்படி ஸம்பாவித்த ஸத்துக்களின் ஸாக்ஷாதுக்திகளொன்றும் நமக்குக் கிடைத்திலது. பண்டிதர்களும் ஸமர்த்தர்களுமாய் க்ரந்தங்களெழுதினால் அவற்றின்மேல் அஸூயுக்கள் உபாலம்பம் செய்தே தீருவர்களென்றும், அப்போது மத்யஸ்தர்களாய் மஹாப்ராஜ்ஞர்களான ஸத்துக்களின் ப்ரசஸ்தி மொழிகளைக் காட்டியே நிற்கவேண்டுமென்றும் ஸ்வாமி தேசிகன் உலகுக்குக் காட்டினாராகிறார். இது காட்டுவதற்காகவே *அகணி ஸதஸி ஸத்பிரித்யாதி ச்லோகாத்நத்தை யருளிச் செய்து வைத்தாரென்பது தெளிவு. இனி ப்ரக்ருதம் ப்ரஸ்தும:.

17. நாம் நெடுநாளாகப் பல க்ரந்தங்களைப் பல பாஷைகளிலுமெழுதி வருகிறோம் அவற்றை லோகோபகாரார்த்தமாக அச்சிட்டுப் பண்டிதர்களுக்கு ப்ரேமத்துடன் அனுப்புகிறோம். இதரர்கள் விலை தந்து வாங்கியநுபவிக்கிறார்கள். உலகத்தில் எல்லார்க்கும் ஏகரூபமாக ரஸிக்கக்கூடிய விஷயம் ஏதுவுமேயிருக்கமாட்டாதன்றோ. *எனக்குத் தேனே பாலே கன்னலேயமுதே யென்கிற பகவத் விஷயமும் பலர்க்கு ரஸிக்கிறதில்லையன்றோ. அவ்வண்ணமாக நமது க்ரந்தங்களிலும் சுவைகண்டு உகப்பாருமுளர், குறைகண்டு வெறுப்பாருமுளர். இங்கு மத்யஸ்தர்கள் நோக்கவேண்டியதொன்றே; நம்முடைய க்ரந்தங்களை உகப்பவர்கள் யாவர்? வெறுப்பவர்கள் யாவர்? என்பது. கீழே நாமெடுத்துக்

காட்டிய *அகணி ஸதஸி ஸத்பி ரித்யாதி தேசிக ச்லோகத்தில் ஸத்பி: என்று ஸாதித்து பொதுவாகச் சில ஸத்துக்கள் தம்மையுகந்ததாகச் சொல்லி நின்றது. நாம் அப்படிச் சொல்லவேண்டாமல், நம்முடைய க்ரந்தங்களையும் வியாஸங்களையும் பாஷணங்களையும் உகப்பார் பரிகணித ப்ரவித்த ப்ரபல பண்டிதர்கள் நாற்றிசையிலும் நிரம்பியுள்ளார்களென்று அதிசயோக்தியின்றிக்கே ஸஸாக்ஷிகமாகக் கூறுவோம்.

18. அன்னவர்களின் பெயர்களைச் சுட்டிக்காட்ட விழிந்தால் அதுவொரு பெரிய புஸ்தகமாகும். “அளவுகடந்த ஆத்மஸ்துதி” என்று தூஷகர்களுக்கு இதுவும் தூஷணைக்கு இலக்காகப் போகிறது. ஆகட்டும், அதனுலென்ன ? அது தேசிகாதிகளையும் ஸ்பர்சித்தே நிற்குமாதலால் அவர்களுக்கு ப்ராப்தமாவதே நமக்கும் ப்ராப்தமாகிறதென்று கொண்டு மகிழ்ந்து நிற்போமத்தனை.

19. நாம் தமிழிலெழுதிய நூற்றுக்கணக்கான உரை நூல்களையும் வசன நூல்களையும் கீர்த்திமூர்த்திகளான மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்கள், ஸேதுபதி ஸம்ஸ்தான மஹாவித்வான் இராமநாதபுரம் இராகவையங்கார் ஸ்வாமிகள், மதுரைச் செந்தமிழ்ப் பத்திராதிபர் திருநாராயணையங்கார் ஸ்வாமிகள் முதலான எண்ணிறந்தவர்கள் அபரிமிதமாகக் கொண்டாடி யெழுதிப் பத்திரிகைகளில் வெளியிட்டுள்ளார்கள். தெலுங்கு ஹிந்தீ பாஷைகளில் நாமெழுதியுள்ள க்ரந்தங்களின் ப்ரசஸ்திகளைப்பற்றி இங்கு ப்ரஸ்தாவிக்கின்றிலோம். ஸம்ஸ்க்ருத பாஷையிலும் மணிப்ரவாள பாஷையிலும் நாமெழுதி வெளியிட்டுள்ள க்ரந்தங்கள் பல பல துறைகளில் அமைந்தவை. ஒவ்வொரு துறையிலும் வெளிவந்த க்ரந்தங்களைப் பெரும்பாலும் ஸுப்ரவித்தவித்வன்மணிகள் நம்முடைய வேண்டுகோளின்றிக்கே பரவசமாகப் புகழ்ந்து வெளியிட்டுள்ளார்கள். அது ஏகாந்தமாகவன்று; நாடு நகரமும் நன்குடன்காண.

20. அப்படிப் புகழ்ந்தவர்களில் ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களே நூற்றுக்கணக்காகத் தேறுவர்கள். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, திருமலை திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமி போன்ற ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரஸம்ப்ரதாயஸ்தர்கள் மிகச் சிலரே புகழ்ந்தவர்கள். நெஞ்சால் நினைப்பரிய பெருமைவாய்ந்த மஹாமஹோபாத்யாய கபிஸ்தலம் ஸ்வாமி, லக்ஷ்மீபுரம் பண்டித ரத்னம் ஸ்வாமி, ஸ்ரீ பரகாலமடஸ்தான வித்வத்வரேண்யர்கள் போன்ற ப்ரபல வித்வான்கள் நம்முடைய க்ரந்தங்களைக் கடாக்ஷித்துத் தங்களுக்குண்டான ஸந்தோஷத்தை உலகமறிய விளக்கியுள்ளார்களென்றால் இதனில் மிக்க அதிசயமுண்டோ? மேற்கூறிய மஹாவித்வான்கள் புகழ்ந்தது நம்முடைய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களையே. மணிப்ரவாள பாஷையில் நாமெழுதிய ஸம்ப்ரதாயார்த்த தத்வபரங்களான க்ரந்தங்களை யுகந்து கொண்டாடினவர்கள் யாவரென்று உலகுக்கு நினைப்பூட்டவேண்டுவது இப்போது ஆவசியகமாகிறது.

21. ஸ்ரீமதஹோபில மடத்தின் ஸகல யோக க்ஷேம நிர்வாஹகராய் வேதாந்த தீபிகைக்குப் பலகாலம் ஸம்பாதகராய் ந்ருஸிம்ஹ ப்ரியா தோன்றினநாள் முதல் தாம் திருநாட்டுக்கெழுந்தருளுகிற க்ஷணம்வரையில் அதற்கும் ஸம்பாதகராய் எழுந்தருளியிருந்து பரம ப்ராமாணிகரென்றும் புகழ்பெற்ற மஹர்ஷி வாஸுதேவர்சார்யஸ்வாமி நம்முடைய ஸாம்ப்ரதாயிகார்த்த தத்வபரிசீலன பரங்களான க்ரந்தங்களைப் பெரும்பாலும் பராமர்சித்துப் புகழ்ந்தெழுதி வேதாந்த தீபிகையிலும் ந்ருஸிம்ஹ ப்ரியாவிலும் வெளியிட்டிருக்குமவற்றை உலகம் கண்டிருக்கிறது. அவர் திருநாட்டுக் கெழுந்தருளின பிறகுங்கூட ந்ருஸிம்ஹ ப்ரியாவில் நம்முடைய க்ரந்தங்களைப் பற்றின மதிப்புரைகள் வெளிவந்தே யிருக்கின்றன.

22. ஹிண்டு, ஆர்ய தர்மம் முதலிய பத்திரிகைகளுக்கும் நம்முடைய சில க்ரந்தங்களை ப்ரகாசகர்கள் அனுப்புவதுண்டாகையால் அவற்றைப்பற்றின புகழுரைகள் அப்பத்திரிகைகளிலும் விசேஷமாகக் கிடைக்கும். அவை முழுதும் ப்ரபல விவேகிகளான தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களாலேயே எழுதி வெளியிடப்படுபவை யென்பதும் ஞாபகத்திலிருக்கத்தக்கது. புதுக்கோட்டை ராஜஸம்ஸ்தானத்தில் தர்மாதிகாரியாயிருந்து விச்ராந்தராயிருக்கும் மதத்ரய நிருபக மஹாபண்டிதரான காளி ரங்காசார்ய

ஸ்வாமி ஸகல பூர்வாசார்ய ஸமுதாயாவதாரரென்று நமக்குப் பெயரிட்டு இந்த விருதைக்கொண்டே ஒவ்வொருவரும் வ்யவஹரிக்கவேணுமென்றும் கட்டளை யிட்டு எழுதியிருக்குமது தேசமறிந்தது.

23. கிம்பஹுநா? ஸ்ரீஉவே. D. T. தாதாசார்யஸ்வாமி யென்பவர் நம்மோடு ஸாக்ஷாத்தாக் விவாதப்பட்டுப் பங்கமடையத்தொடங்கின பிறகு நிந்திக்கத் தலைப்பட்டிருக்கிறாரே யொழிய அதற்கு முன் தமது கையாலெழுதி உத்யாந பத்திரிகையில் வெளியிட்டிருக்கின்ற மதிப்புரைகளைத் தாமே யெடுத்து வாசித்துப் பார்க்கலாமே. ஆதிசேஷன் படமெடுத்தாடும்போது ஆனந்தமாகக் கண்டு கொண் டிருந்து ஹாஹா என்ன தாண்டவமென்ன நர்த்தனமென்று புகழுகிறவர்கள் போராத தலைவிதியினால் சிறிது சேஷ்டை செய்து கடியுண்டு வையவுமடிக்கவும் முயல்வது போலவும், கண்ணபிரானிடத்தில் *யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசா: ப்ரதிபேதிரே* என்று மஹர்ஷி கூறினபடியும் *கழல் மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி* என்ற பாசுரத்திற் பெரியாழ்வார் கூறினபடியும் பரவசர்களாய் மரியாதை காட்டி நின்ற துர்யோதநாதிகள் விதிவசத்தால் த்ரோஹிகளானாப்போலே *அலுப்த மூர்த்தந்யலிபிக்ரமத்வத்தாலே சிலர் பழைய நிலையை மறந்தும் மறைத்தும் தூஷிக்க முன்வந்து பங்க மடைந்தால் அதற்கு யார் என் செய்வது !.

24. *நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கை மீர்களிதோரற்புதம் கேளீர்* என்று பெரியாழ் வார் தெரிவித்ததுபோல ஈண்டு ஓரத்புதம் தெரிவிக்கின்றேன் காண்மின். ஸ்ரீரங்கம் பெரியாச்ரமமென் கிற ஆண்டவனாச்ரமத்தில் ஸ்ரீமத் ஆக்கூராண்டவனுக்குப் பிறகு ஆஸ்தானத்தை யலங்கரித்தருளாநின்ற வர்த்தமாந ஆண்டவன் ஸ்வாமியோடு அடியேனுக்குப் பரிசயமின்றிக்கே நேரில் ஸேவிக்கப்பெற்றது மின்றிக்கே பத்ரவ்யவஹார ப்ரஸக்தியுமின்றிக்கே யிருந்தது. இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பு அந்த ஸ்வாமி ஸன்னிதியிலிருந்து அசிந்திதமாக வொரு ஸ்ரீமுகம் கிடைத்தது—"தேவரீருடைய க்ரந்தங்களையும் வாக்விலஸிதங்களையும் ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித்தும் கேட்டும் மிகவுமுகந்தருளியாச்சுது. தேவரீருடைய க்ரந்தங்களை யெல்லாம் கடாக்ஷிக்க மிகுந்த குதூஹலமுண்டாகியிருக்கிறது, அப்போ தப்போதனுப்பிக்கொண்டிருக்கும்படியாக நியமனம்" என்று *ஸ்ரீகார்யதுரந்தரர் எழுதியிருந்தார். அந்த நியமனத்தை சிரஸாவஹித்து ஸ்ரீஸ்வாமியின் ருசியை யுணர்ந்து பத்தெட்டு க்ரந்தங்களை யனுப்பி யிருந்தேன். அவற்றோடே ஸதுபதேச சிக்ஷா—ந்ருஸிம்ஹ ப்ரியாஸமீக்ஷா—ஸாத்விக ஸதுத்தரங்களையும் கடாக்ஷித்தருள அனுப்பியிருந்தேன். அவற்றை யெல்லாம் கடாக்ஷித்தருளி அநுக்ரஹித்த ஸ்ரீமுகம்:—

"ஸ்ரீஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதீத்யாதி பிருதாலங்க்ருதாநாம் ப்ரதிவாதி மத்தகஜ பயங்கர கண்டீரவாணாம் ஸ்ரீமதாம் அண்ணங்கராசார்யாணாம்..........வாதப்ரதிவாதக்ரந்தஜாலம் அதிகதம். ஸ்ரீமதாசார்யவர்யாணாம் கடாக்ஷபாத்ரஞ்ச அபவத். ஸர்வம் ஆநுபூர்வ்யா கடாக்ஷிதவந்த: மஹாகுரு வராஸ் தே ஆநந்ததுந்தில ஸ்வாந்தாஸ் ஸந்த ஏவம் ப்ரசசம்ஸு:—பஹு ஸுதர்க்க ஸச்சாஸ்த்ராநு ஸாரி ப்ரமாண புஞ்ஜ மஞ்ஜுள ஸஹ்ருதய ரஸிக ஸுஹ்ருத்ரஞ்ஜக நிரதிசயாச்சர்யசைலீப்ரகும்பித வசநமணிமாலாலங்க்ருதாந் தர்சநாவஸரேஷு நவம் நவம் அத்யுத்ஸாஹ ஜநகாந் விவித விசித்ர விஷய வர்க்காந் தர்சம்தர்சம் நிரவதிகதுஷ்டிம் அலபந்த. கிஞ்ச ஏவமேவ யுஷ்மாகம் சேஷமாயுரபி நித்ய நிரவத்யகைங்கர்யோபயுக்ததேஹாரோக்ய தநதாந்ய ஸம்ருத்திசாலி பூயாதிதி ஸ்ரீரங்கநாயிகாஸமேதம் ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்ம புந:புந: ப்ரார்த்தயே இதி." என்பதாக.

25. இந்த ஸம்ஸ்க்ருத வாக்யங்களின் கருத்துச் சுருக்கம்—தேவரீரெழுதியுள்ள வாத க்ரந்தங்க ளெல்லாம் சாஸ்த்ர ப்ரமாண உபபத்திகள் மலிந்தவை யென்றும் எத்தனை தடவை வாசித்தாலும் ஆரா வமுதமாய் விளங்குகின்றனவென்றும் ஸகல ரஸிக பண்டிதர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின் றனவென்றும் ஆண்டவன் ஆனந்தம் பொங்கி ஸாதித்ததாக. நம்முடைய க்ரந்தங்களுக்கு ஒரு மதிப்புரை தந்தருளவேணுமென்று நாம் அபேக்ஷித்ததில்லை, எதிர் பார்த்ததுமில்லை. *துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதய

மஹோ நைதவமத்ர ப்ரமாணம்* (பாதுகாஸஹஸ்ரே.) என்று தேசிகனருளிச்செய்தபடி எம்பெருமானுடைய திவ்யஸங்கல்பமே யடியாகத் தோன்றிய ஸ்ரீமுகமிது என்பதில் ஸந்தேஹ முண்டோ? அலப்ய லாபமான ஸ்ரீமுகமேயிது.

26. இந்த ஸ்ரீமுகம் கிடைத்த பிறகு வைகுண்டைகாதசீமஹோத்ஸவ ஸேவார்த்தமாக அடியேன் கோயிலுக்கு விடைகொண்டிருந்தபோது அந்த மஹாஸ்வாமியை இதம் ப்ரதமமாக ஸேவிக்கவும் ப்ராப்தமாயிற்று. அப்போது ஸ்ரீஸ்வாமியருளிய அருள் மொழிகள் *பணிமொழி நினைதொறும் ஆவிவேமால்* என்ற நம்மாழ்வாரருளிச்செய்தபடியேதான். அது நிற்க. அந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகத்தைக் கண்களிலொற்றிக்கொண்டு ஸேவித்துக் களிமின் கண்ணும் நெஞ்சுமுடையீர்!

27. இப்படிப்பட்ட ஸ்ரீமுகங்களையும் புகழுரைகளையும் பெறுதற்குக் கடல் சூழ்ந்த மண்ணுலகில் மற்றொருவர் பாக்கிய முடையரோ? *கோரமாதவஞ் செய்தனன் கொலறியேன்* யானே தவஞ்செய்தேன்* என் மதிக்கு விண்ணெல்லாமுண்டோவிலை* மலக்கு நாவுடையேற்கு மாறுளதோ இம்மண்ணின் மிசையே* என்று ஆழ்வார்களும் *இல்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரே* *ப்ரபஞ்ச ப்ரவித்தப்ரபந்தப்ரவக்தா விரிஞ்சிப்ரபஞ்சே மதந்ய: கவி: க: ?* என்று ஆசாரியர்களும் சில ஸமயங்களில் தம்மையுமறியாமல் பேசியிருப்பனவுள. அப்படி அடியேனும் பேசுநிற்கும்படியாக பகவத் பாகவத மஹாக்ருபையைப் பெற்றிருக்கிறேனென்றால் *வாய்ந்த மதுகைடபரும் வயிறுருகி மாண்டார்* என்று ஒராழ்வாரருளிச் செய்ததுபோல இவர்களும் வயிறுருகி முடிய வேண்டுவது தவிர வேறுண்டோ?.

28. இதெல்லாம் கிடக்க. சென்ற சித்திரை மாதத்தில் வெளிவந்த ந்ருஸிம்ஹப்ரியா "ஸ்ரீ அண்ணங்கராசார்யஸ்வாமி" என்றே மகுடம் புனைந்தவோர் வியாஸத்தை உலகமெல்லாம் ஓவாதலுணை வுண்ணும்படி வெளியிட்டுளது. அதில் வ்ருத்தாந்தபரமாக எழுதிய விரிவுகள் கிடக்கட்டும். வ்யக்திபரமாக எழுதியுள்ள வாசகங்களிவை காண்மின்:—"ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு இந்த ஸ்வாமி செய்ததும் செய்துவருவதுமான அரும்பெருந்தொண்டுகளைக் கண்டு உகந்த ஸ்ரீ வைஷ்ணவவுலகம் ஸ்வாமிக்கு ஹார்தமாக நடத்திவைத்த ஒரு மஹோத்ஸவமிது என்பதுதான் தத்வம். ஸ்ரீமான் அண்ணங்கராசார்யஸ்வாமியை ஒரு சாரார்கள் மட்டும் தம்மைச் சேர்ந்தவர் என்று கொண்டாடாது அசேஷ ஸ்ரீவைஷ்ணவர்களும் நம் தர்சனத்தை அரும்பாடுபட்டு அபிவிருத்தி செய்துவரும் உந்நத புருஷரிவர் என்று கொண்டாட ப்ராப்தம்" என்றாயிற்று எழுதியுள்ளது.

29. இப்படி யெழுதுமவற்றால் நமக்கு அபூர்வமான வொரு பெருமையுண்டாய் விட்டதாக நாம் நினைத்து இவற்றை யெடுத்துக்காட்டுகிறோமல்லோம். ப்ராமாணிகர்களின் நிலை இப்படிப்பட்டதென்பதையும், உலகில் அவரவர்கள் எழுதும் க்ரந்தங்கள் போன்றவையல்ல நம்முடைய க்ரந்தங்கள் என்பதையும், நாமெழுதும் விஷயங்களுக்கு மறுப்பெழுதத் தோன்றினால் வீணான அதிக்ஷேபபரிஹாஸவார்த்தைகளை அறவேவிட்டிட்டு விஷய விமர்சத்தளவிலே நிற்கவேண்டுமென்பதையும் தூஷகர்களின் மனத்தில் ஊன்றவைக்கவே இவ்வளவு எழுத நேர்ந்தது. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் வாசித்தவர்கள் சிலரே. அதிலும் அறக்கற்று எழுதுகோலைக் கையிலெடுத்து எழுதும் யோக்யதை பெற்றவர்கள் மிகச்சிலரே. மடத்து வித்வானென்று உகந்து சொல்லக்கூடியவர் முதன்முதலாக எழுதத் தொடங்கும்போதே மிகவுமருவருக்கத்தக்க க்ராம்யமான ரீதியில் எழுதுவது அழகா? ஆத்ம குணஸம்பத்தியில் அத்விதீயர்களாகப் புகழ்பெற்றிருக்கின்ற ஸ்ரீஸ்ரீ அழகிய சிங்கர்களின் திருவடிவாரத்திலே அத்தாணிச் சேவகஞ்செய்து வாழ்பவர் எவ்வளவோ அழகாகவும் விநயமதுரமாகவும் ப்ரேம பேசலமாகவும் நீதிபுஷ்கலமாகவும் எழுதப் பயிலவேண்டுமே. அந்தோ! ஸதாசார்ய ஸேவை பாழாகிறதே.

30. தத்வபாஷணமென்று பெயரிட்டு ஜால்மோக்திகளையும் க்ராம்ய கதைகளையுமடுக்கி வருகின்ற சிரோமணி வித்வான் எழுதுகிறார்—"ஓர் அநுநாவிகர் *ஆர்த்தோபச்சர்தநம் கத்யம் பாஷ்யம் து ப்ராஞ்ஜநம்* என்று நிச்சயித்து ஈட்டையே காலக்ஷேபஞ் சொல்லத் துணிந்தாராம். ............... *தந்யா லக்ஷ்மண! ஸேவந்தே பம்போபவநமாருதம்* என்கிற ச்லோகம் வந்தவுடனே, பம்போ— அது என்ன வம்போ. ..............." இத்யாதி. இப்படிப்பட்ட பரிஹாஸகதைகள் கடைவீதிப் புராண ப்ரவசனங்களில் பல கேட்கலாம். விஷயசர்ச்சை செய்யவேண்டியவர் இவற்றையா எழுதுவது.

31. இது கல்பித கதை. உண்மையாக நடந்த கதையொன்று நாமெழுதுகிறோம் காண்மின் ;— அழகிய சிங்கர்களிலொருவர் காஞ்சீபுரம் ஸன்னிதியை ஸேவிக்க வந்திருந்தார் ; பெருந்தேவித்தாயார் ஸன்னிதியில் அர்ச்சகர் ஸ்ரீசடகோபன் ஸாதிக்கும்போது அந்த யதிவரர் "தந்யாஸ்மி, அநுக்ருஹீதாஸ்மி, க்ருதார்த்தாஸ்மி" என்று உச்சைஸ்ஸ்வரமாய் வெகு கம்பீரமாகச் சொன்னார். அருகேயிருந்த தாதாசார்ய வித்வானொருவர் புன்முறுவலோடே உற்று நோக்கினார் ; அதுகண்ட அந்த யதிகள் 'என்ன வோய் உற்றுப் பார்க்கிறீர் ; எனக்கு லிங்கஜ்ஞானங்கூட இராதென்று நினைத்து விட்டீரோ? பெருமாள் ஸன்னிதியில் சடாரியாகும்போது தந்யோஸ்மி, அநுக்ருஹீதோஸ்மி, க்ருதார்த்தோஸ்மி* என்று பும்லிங்கமாகச் சொல்லவும், தாயார் ஸன்னிதியில் தந்யாஸ்மி, அநுக்ருஹீதாஸ்மி, க்ருதார்த்தாஸ்மி என்று ஸ்த்ரீலிங்கமாகச் சொல்லவுங்கூடவா தெரியாதெனக்கு? இவ்வளவு வ்யுத்பத்திகூட இல்லாவிடில் மடாதிபதியென்று நான் வரமுடியுமா? நானும் பாஷ்யாதி ப்ரவசனங்கள் செய்து கொண்டுதானே யிருக்கிறேன்! இத்யாதிகள் அரைமணி காலம் பொழிந்தார். ஹா ஹா! என்ன ஜ்ஞானம்! என்ன வாக்மித்வம்! என்று வியந்து யாவரும் திகைத்துப் போனார்கள். இப்படிப்பட்ட ஆச்சரியங்களை *யசஃகாயேந ஜீவந் தையார் குப்புஸாமி ஐயங்கார் உடனிருந்து அநுபவித்தவர் சொல்லிச்சொல்லி மாய்வர்.

32. இப்படி நூற்றுக்கணக்கான கதைகள் வித்வான்களும் உகந்து செவிசாத்தத் தக்கவையுண்டு. பம்போ—வம்போ வென்று பாமரர்களும் வெறுக்கத்தக்க வம்புப்பேச்சுக்களை நிரப்பியும், க்ரமேண நாம் எடுத்துக்காட்டி விளக்கிவருகிற அஸமஞ்ஜஸ அஸம்பத்த விஷயங்களைப் பரப்பியும் தத்வபாஷணமென்று வெளியிட்டால் மடந்தவிர மற்றொன்று மகிழுமோவிதில்?

33. இந்த பஷணகாரர் எழுதுகிற விஷயங்களின் வைகரியை வித்வான்களுக்கெடுத்துக் காட்டுவோம் சிறிது. ஆரம்பத்தில் "உபநிஷத்துக்கள் ஸ்ரீபாஷ்யத்திற்கே பொருந்தியிருக்கிறது என்றும் சொல்லலாம் ; ஸ்ரீபாஷ்யம் உபநிஷத்துக்களோடு பொருந்தியிருக்கிறது என்றும் சொல்லலாம்; இதில் ப்ராமாணிகர்கள் விவாதப்பட இடமில்லை" என்றெழுதுகிறார். உபநிஷத்துக்கள் ஸ்ரீபாஷ்யத்திற்கே பொருந்தியிருக்கிறதென்றால் ஸ்ரீபாஷ்யசரத்தர்களுக்குள்ள வகுப்பினர் ஒக்கும் ஒக்கும் என்று கைகூப்பி நிற்கலாம். மற்றையோர்கள் இது அஸங்கதோக்தியென்றுக்ஷேபிக்கவே நேரும். அப்போது உபநிஷத்துக்கள் ஸ்ரீபாஷ்யத்திற்கே பொருந்தியிருக்கும்படியை அவிசால்யமாக நிரூபித்தாலொழிய அந்த வார்த்தை வெற்றி பெறாது. இதையே நாம் ஸதுபதேச சிக்ஷையில் (பக்கம் 5-ல்) காட்டினோம்.

34. "ஈடு தேசிக திவ்யஸூக்திகளுக்கே பொருந்தியது" என்று எழுதியிருந்தால் ஆக்ஷேப முதிக்க ப்ரஸக்தியேயிராது. அப்படியன்றிக்கே *புதுத்தெய்வங் கொண்டாடுந்தொண்டீர்* என்று திருமங்கை மன்னனருளிய கணக்கிலே ஒரு க்ரந்தத்தோடும் ஸம்பந்தம் பெறாதவொரு நூதநஸம்ப்ரதாயத்தைக் கல்பனை செய்துகொண்டு அதற்கு தேசிகஸம்ப்ரதாயமென்று நாமகரணஞ்செய்து அதற்கே ஈடு பொருந்தியிருக்கிறதென்றால் வர்ஷசதமானாலும் வித்வத்ப்ருந்தஸஹஸ்ரம் திரண்டாலும் இந்த அஸம்பத்தப்பேச்சை ஸமர்த்திக்க முடியாதென்பது திண்ணம். இனி பெரியவிஷயங்களிற் செல்வோம்.

RATHNAM PRESS (BRANCH) MADRAS-1

ஸ்ரீரஸ்து.

# ஸர்வார்த்தஸித்தாஞ்ஜநம்.

तत्त्वभाषणमिषेण तथ्यवाग्गन्धबन्धविधुरप्रलापिनम् ।
सत्प्रमाणशरजालवृष्टिभिः विद्धमेव वितनोमि वीक्ष्यताम् ॥

सन्तस्संतुष्येयुस्सत्यंसत्यं न्यरूपि युक्तमिति ।
यदि मठभोजननिरताः कतिचिद्विलपन्ति सुष्ठु विलपन्तु ॥

व्याहतलेखनदक्षो मितधीर्मठभुक् स्वकृत्यमात्ररतिम् ।
धत्तां, मा स्म तु निपतत् वृथा सदाचार्यदूषणदुरब्धौ ॥

## பிராட்டியின் உபாயத்வ சோதனம்

1. த்வயத்தில் பூர்வகண்டத்தில் ஒரு விசாரம். *ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே* என்கிறவிதில் லக்ஷ்மீஸமேதனை நாராயணனை உபாயமாகப் பற்றுவதாய்ச்சொல்லப்படுகிறது. இங்கு ப்ரதிபந்நமான ப்ரபதநகர்மத்வம் நாரயணனுக்கு எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டதாகவே பிராட்டிக்கும் உண்டா இல்லையா என்பது விசாரம். இல்லையென்பது பட்டர் தேசிகன் முதலானோருடைய ஸித்தாந்தம். உண்டு என்பது நவீனர்களின் கொள்கை. முதலில் பட்டருடைய திருவுள்ளத்தை விவரிப்போம். அவர் ஸாதித்தருளின அஷ்டச்லோகியில் த்வயார்த்த விவரணச்லோகங்களில்,

> “ ஈசாநாம் ஜகதாம்அதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம்
> ஸம்ச்ரித்ய, ஆச்ரயணோசிதாகில குணஸ்யாங்க்ரீ ஹரேராச்ரயே,
> இஷ்டோபாயதயா, ச்ரியா ச ஸஹிதாயாத்மேச்வராயார்த்தயே
> கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம்த்வஹம் நிர்மமஃ ”

என்பது ஒரு ச்லோகம். இதில் த்வயத்தின் உபயகண்டார்த்தங்களும் ஸாரமாக நிரூபிக்கப்பட்டுள்ளன. (இஷ்டோபாயதயா) என்கிற வரையில் பூர்வ கண்டார்த்தம். அதில் (ச்ரியம் ஸம்ச்ரித்ய) என்று முற்பட வொரு ஆச்ரயணத்தை ஸாதித்து முடித்துவிட்டு, பிறகு “ஹரேஃ அங்க்ரீ இஷ்டோபாயதயா ஆச்ரயே” என்று தனிப்பட பகவத்ப்ரபதநம் ப்ரதிபாதிதமா யிருக்கிறபடியை நோக்கவேணும்.

2. இங்கே அஸ்மத்குல கூடஸ்தாசார்யருடைய வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிவை:—“பகவத் ப்ரதாந மஹிஷீம் ச்ரியம் மாத்ருத்வப்ரயுக்த வாத்ஸல்யாதிரேகாத் அவ்யவதாநேந புருஷகாரதயா சரணம் ப்ரபத்ய—இத்யர்த்தஃ” என்றும், மேலே உத்தர கண்டார்த்த விவரணத்தில் (ச்ரியாச ஸஹிதாய) என்னுமிடத்து “சரணவரண காலே புருஷகாரபூதயா லக்ஷ்ம்யாச ஸம்ச்லிஷ்டாய” என்று முள்ளன. இந்த வியாக்கியான வாக்யங்கள் இருக்கவுமாம், இல்லையாகவுமாம்; பட்டருடைய மூல ஸ்ரீஸூக்தியே பர்யாப்தம். உத்தரகண்ட ப்ரமேயமான கைங்கரிய ப்ரார்த்தனையில் திவ்ய தம்பதிகளிருவர்க்கும் தாரதம்யமற்ற ப்ரதிஸம்பந்தித்வத்தை “ச்ரியாச ஸஹிதாய ஆத்மேச்வராயார்த்தயே கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம்” என்றருளிச் செய்தவர் தாமே பூர்வகண்ட ப்ரமேயமான சரணவரணத்தில் அந்த திவ்ய தம்பதிகளிருவர்க்கும் அங்ஙனே துல்யமான ப்ரதிஸம்பந்தித்வத்தை யருளிச்செய்யாமல் வாக்யபேதம் செய்தருளியிருக்கின்றவாற்றை நோக்குங்கால் பட்டருடைய ஸித்தாந்தம் எளிதாகப் புலனாகுமன்றோ. ஸ்வாமி தேசிகன் பட்டருடைய ஸ்ரீஸூக்திகளையே நிதியாகக் கொண்டு பலவிடங்களிலும் தத்வ நிர்த்தாரணம் செய்தருளக் காணாநின்றோம். பட்டர் ஸ்ரீஸூக்தியோ எவ்விதமான ஸந்தேஹத்திற்கும் விவாதத்திற்கும் இடமின்றியே யுள்ளது. இஷ்டோபாயதயா என்பது

*ச்ரியம் ஸம்ச்ரித்ய* என்ற விடத்தில் ஒரு படியாலும் இணங்கக்கூடாதென்கிற வலிதான திருவுள்ளத்தோடே அதை உத்தரார்த்தத்திலே கொண்டுபோய் விந்யஸித்துள்ளார்.

3. த்வயத்தில் இரண்டு வாக்யத்திலும் ஸ்ரீமத் பதமுள்ளது. ஆனாலும் பூர்வ வாக்யத்தில் மாத்திரம் மதுப்பின் அர்த்தம் உபலக்ஷணத்வரூபமென்றும் உத்தரவாக்யத்தில் அது வைசிஷ்ட்யரூபமென்றும் இங்ஙனே தாரதம்யம் கல்பிப்பதற்கு என்ன நியாமக மென்று நவீநர்கள்கேட்கிறார்கள். இந்தஉபலக்ஷணத்வ-வைசிஷ்ட்யங்களைப்பற்றி மேலே பரக்கநிரூபிக்கப் போகிறோமாதலால் க்ரமேண தெளியலாம். இந்தக் கேள்வியே ஸூதரம்அஸமஞ்ஜஸ மென்பதே இங்கு ஸாரமான வார்த்தை. *மத்ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாம் அதஃ, லக்ஷ்மீஃ புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:. மமாபிசமதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத். அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை ஸாக்ஷால்லக்ஷ்மீபதிஸ் ஸ்வயம்* இத்யாதி வசநங்கள் பகவச்சாஸ்திரத்திலுள்ளவையாகப் பூர்வாசார்யர்களால் எடுத்தாளப்பட்டவை.

4. ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தத்தில் அறுபதாமத்யாயத்தில் ருக்மிணீக்ருஷ்ண ஸம்வாதே க்ருஷ்ணனை நோக்கி ருக்மிணி சொல்லுகிறாள்—*நந்வேததேவமரவிந்தவிலோசநாஹம் யத்வைபவாந்ந பவதஸ்ஸத்ருசீ விபூம்நஃ, க்வ ஸ்வே மஹிம்நி அபிரதோ பகவாந் த்ர்யதீச க்வாஹம் குணப்ரக்ருதி ரஜ்ஞக்ருஹீத பாதா* என்றவிடத்து ஸ்ரீவீரராகவீய வியாக்கியானத்தில் "அஜ்ஞை:—மம த்வத்பாரதந்த்ர்யம் அஜாநத்பிஃ, க்ருஹீதௌ— உபாஸிதௌ, பாதௌ யஸ்யாஸ் ஸா அஹம் க்வ? அபிஜ்ஞாஸ்து ந மாம் ஸ்வதந்த்ராமுபாஸதே; கிந்து மாம் த்வத்பரதந்த்ராம் புருஷகார மாத்ரம் க்ருத்வா மத்விசிஷ்டம் த்வாமேவ உபாஸதே." என்று விவரணமுள்ளது.

5. ஸ்ரீதேசிகன் ரஹஸ்யரத்நாவளியிலே "ஸ்ரீமானான நாராயண னொருவனுமே ஸர்வஜீவர்களுக்கும் தஞ்சம்..........ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்" என்றருளிச் செய்தருளி இதன் பொருளை ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயத்திலே அழகாக விவரித்தருளினார்.

6. ஸ்ரீ பாஷ்யத்தில் * விநதவிவிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே * என்ற விடத்திற்கு வியாக்கியான மருளிச் செய்யாநின்ற ச்ருதப்ரகாசிகாபட்டர் "விநதரக்ஷாபதாப்யாம் த்ருதீய சதுர்த்தாத்யாயார்த்தௌ ஸம்க்ஷிப்தௌ; ஏவம் ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வே கதிதே; ஏதே ஹி ராஜ்ஞச் சத்ரசாமரவத் ப்ரஹ்மணஃ அஸாதாரண சிஹ்நம்" என்ற ஸ்ரீஸூக்திகளால் மோக்ஷப்ரதத்வம் எம்பெருமானுக்கே உரித்தாயிருப்பதென்று அருளிச் செய்தார்.

7. ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸாரத்திலும் பரிபூர்ண ப்ரஹ்மாநுபவாதிகாரத்தில் "ஈச்வரனுக்குச் சத்ரசாமராதிகளைப் போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ மோக்ஷ ப்ரதத்வ ஸர்வாதாரத்வ ஸர்வ நியந்த்ருத்வ ஸர்வசேஷித்வ ஸர்வ சரீரித்வ ஸர்வ சப்தவாச்யத்வ ஸர்வ வேத வேத்யத்வ ஸர்வலோக சரண்யத்வ ஸர்வமுமுக்ஷூபாஸ்யத்வ ஸர்வபல ப்ரதத்வ ஸர்வ வ்யாப்தஜ்ஞாநாநந்த ஸ்வரூபத்வ லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிநியதங்கள்." என்றருளிச் செய்யப்பட்டது. இங்கு, லக்ஷ்மீ ஸஹாயத்வத்தை முடிவாகச் சொல்லி வைத்தது வெகு அற்புதமானது. பிராட்டிக்கு லக்ஷ்மீஸஹாயத்வம் எப்படி ஸம்பவியாதோ அப்படியே முன்சொன்ன மோக்ஷப்ரதத்வாதிகளும் ஸம்பவியாதென்று விளக்கினபடி.

8. ந்யாயஸித்தாஞ்ஜநத்திலும் ஜீவ பரிச்சேதத்தில் "ஸ்ருஷ்ட்யாதி ஜகத்வ்யாபார மோக்ஷப்ரதத்வ முமுக்ஷூபாஸ்யத்வ ஸர்வ சேஷித்வாதி ரூப பகவதஸாதாரண தர்ம...." இத்யாதியால் இவ்வர்த்தமே சொல்லப்பட்டது. அவ்விடத்திற்கு வியாக்கியானம் பண்ணினவர்களும்,

" ஜகத்வ்யாபார மோக்ஷப்ரதத்வாதேः முக்தஸாதாரண்யே தேஷாம்
வேதாந்தேஷு ப்ரஹ்மலக்ஷணத்வேந உபதேசோ ந ஸ்யாதிதி பாவः"
என்றுரைத்தனர்.

9. ஆக இவ்வளவு ப்ரமாணபுஞ்ஜங்களாலே உபாயத்வம் நாராயணனுக்கே உரியதென்று ஸம்சயவிபர்யயமற விளங்கா நிற்கும்போது த்வயத்தின் பூர்வகண்டத்திலுள்ள மதுப்பானது பிராட்டிக்கு உபாயத்வப்ரதிபாதகமாக ஸம்பாவனையில்லை. ஆனபின்பு " சப்தஸ்வரஸதः ப்ராப்தம் வைசிஷ்ட்யம் ப்ரதமச்ருதம், விசேஷ்ய சரணத்வித்வம் நஹி பாதிதுமர்ஹதி " என்றுகூற ப்ரஸக்திலேசமுமில்லை. இதனை விரிவாக விளக்குவோம். வைசிஷ்ட்யம் சப்தஸ்வரஸதः ப்ராப்தமென்பதை அப்படியே இசைந்திடுவோம். அதை த்விவசநாந்த சரணசப்தத்தாலே பாதிப்பார் யாருமில்லையே. அப்ரஸக்த ப்ரதிஷேதம் ஏதுக்கு? சப்தஸ்வரஸதः ப்ராப்தமான வைசிஷ்ட்யமாவது என்ன? என்பதை முந்துற ஆராயவேண்டும். ஆராய்ந்தால் நவீநர்களின் இந்த விசாரமே முற்றிலும் அஸ்தாநே என்பது எளிதிற் புலனும்.

10. த்வயார்த்த நிர்வாஹபரமாக ஸ்வாமி தேசிகன் எழுதியுள்ள எந்த இடத்தை யெடுத்து ஆராய்ந்தாலும் நன்றே. இங்குச் சிலவிடங்களெடுத்துக் காட்டுகிறோம்; கத்யபாஷ்யத்தின் உபக்ரமத்தில்—

" कृत्स्नमिदं गद्यं द्वयविवरणमिति साधीयान् संप्रदायः । इह च भगवत्पदने समुद्यतस्य सम्यग्ज्ञान-संपादनपुरुषकारपुरस्कारादिकं पूर्वकृत्यम् ;साङ्गस्वरक्षाभरसमर्पणं तत्काल कृत्यम् ; स्वनिष्ठानुसन्धानपूर्वकं स्वाधिकारोचित-कैङ्कर्यादिकमुत्तरकृत्यम् ; शरण्यस्य तु पूर्वकृत्यं पुरुषकारप्ररोचनादिकम् ; तत्कालकृत्यम् समर्पितसर्वभरस्वीकरणम् ; उत्तरकृत्यं तु मुक्तिप्रदानपर्यन्तम् ॥ " என்றுள்ளது.

11. இதில் ஸமர்ப்பிதபரஸ்வீகரணம் சரண்யனுடைய க்ருத்யமென்றதேயொழிய தம்பதிகளின் க்ருத்யமென்று சொல்லிற்றில்லை. இதனால் முன்வாக்யத்தில் " ஸாங்கஸ்வரக்ஷாபரஸமர்ப்பணம் தத்கால க்ருத்யம் " என்றதும் புருஷகாரோத்தேஜிதகுணகணனான நாராயணனிடத்திலே யென்பது தெற்றென விளங்கிற்று. மேலே * ச்ரியம் தேவீம் * என்ற விடத்தில் ஸ்ரீசப்தார்த்த நிருக்திகளை நிரூபித்தருளினபின்—" ஸ்ரீபதநிருக்திபிः ஸம்ச்ரித தோஷநிராகரணம் ப்ராப்யருசிப்ராபகாத்யவஸாயாதிப்ரதாநம் உபாயஸ்வரூப நிர்வர்த்தகத்வம் பதிப்ரஸாத ஜநகத்வஞ்ச ஸித்தம் " என்றார். ஸ்ரீசப்தத்திற்குள்ள ஆறுவகை வ்யுத்பத்திகளில் ஸ்ரீயதே என்பதும் ஒன்று. ஆச்ரயண கர்மத்வம் நாராயணனுக்குப் போலே பிராட்டிக்கும் ப்ரமாணஸித்தமாகவுள்ளது. பிராட்டிக்குச் சொல்லப்படுகிற இந்த ஆச்ரயணகர்மத்வத்தை ஸ்வாமி தேசிகன் ஒவ்வோரிடத்திலும் எங்ஙனே நிர்வஹித் தருளுகிறாரென்பதொன்றையே நிபுணர்கள் நோக்கவேணும்.

12. ஸ்ரீக்கு உபாயத்வமில்லை யென்றும், சரணம் ப்ரபத்யே என்ற க்ரியையில் அவளுக்கு அந்வயமில்லையென்றும் ஸாதிக்கிறவர்கள் தாமும் ச்ரியம் ப்ரபத்யே என்றும் ஸ்ரீசரணௌ சரணம் ப்ரபத்யே என்றும் அநுஸந்தியாமலில்லை. * லக்ஷ்ம்யாः பதாம்புஜயுகம் சரணம் ப்ரபத்யே * என்று நூறாயிரம் கவிகள் பணித்தேவருகிறார்கள். கத்யத்தில் * பகவந்நாராயணாபிமத...என்று தொடங்கி * அசரண்ய சரண்யாம் அநந்ய சரணச் சரணமஹம் ப்ரபத்யே * என்றதை நிஸ்ஸங்கோசமாக நித்யாநுஸந்தானம் செய்து போருவதையும் காணுகின்றோம். அப்படிப்பட்டவர்கள் த்வயத்திலுள்ள " சரணம் ப்ரபத்யே " என்ற க்ரியையில் மாத்திரம் பிராட்டிக்கு அந்வயம் கிடையாதென்று கூறினால் அவர்களின் திருவுள்ளம் யாதென்று ஆராய வேண்டாவோ? அபிஸந்திமருமமறிய வேண்டாவோ? ஒருவர் ஆசார்யனையும் விட்டு ஆசார்யன் திருவடிகளையும் விட்டு ஆசாரியன் திருமாளிகையையே பரமோத்தேச்யமாகக் கொண்டு

அந்தத் திருமாளிகை விஷயமாக ஒரு ஸஹஸ்ரம் பணிக்கிறார். நம்மாழ்வார் அழகரை விட்டு அழகர் திருமலையையும் விட்டு அந்தத் திருமாலிருஞ் சோலைமலைக்கு அருகேயுள்ள ஒரு குன்றைத் தஞ்சமாகப் பற்றுங்களென்கிறார்—*மயல்மிகு பொழில் சூழ் மாலிருஞ்சோலை அயன்மலையடைவது அதுகருமமே.* என்று. இதில் யார்க்கும் விப்ரதிபத்தியில்லை. இவ்வண்ணமாகவே த்வயத்தில் 'சரணௌ சரணம் ப்ரபத்யே' என்றதில் பிராட்டிக்கும் அன்வயமிருந்தால் என்ன ஹாநி வரும்? இதை மஹாப்ராஜ்ஞர்களான ஆசார்யர்கள் மறுக்கிறார்களென்றால் இதில் நுட்பமறிவதன்றோ நுண்ணறிவாளரின் கடமை. கேண்மின்;

13. எம்பெருமானுக்குச் சொல்லுகிற சரணவரண கர்மீபாவம் அநந்ய ஸாமாந்யம். அதில் கூறுகொள்ள யார்க்கும் உரிமையில்லை. இதனை ஸ்ரீதேசிக திவ்ய ஸூக்திகளே நிலைநாட்டும். பிராட்டிக்கு உபாயத்வாவச் சேதகத்வ மொழிய உபாயத்வமில்லையென்கிற ஸித்தாந்தத்திலே ஸகலாசார்யர்களும் ஸமகண்டர்களே. "உபாயத்வாம்சத்திலே பிராட்டிக்கும் பெருமாளுக்கும் ஸாம்யம் ப்ரதிபந்நமாகுமிடங்களில் *ச்ரியஃஸ்ரீஃ ஸ்ரீரங்கேசய! தவச ஹ்ருத்யாம் பகவதீம் ச்ரியம் த்வத்தோபி உச்சைர்வயமிஹ பணுமஃ ச்ருணுதராம்* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திக் கட்டளையிலே நிர்வாஹம்" என்று முன்னோர் மொழிந்த முறை. அதாவது—எம்பெருமானைக் கீழ்ப்படுத்திப் பிராட்டியை மேற்படுத்திப் பேசுவதறகுள்ள தார்த்பர்யமே ஸமநிலையில் வைத்துப் பேசுவதற்கு மொக்கும் என்றவாறு. "ஆசாரியர்களும் பாகவதர்களும் பகவானிலும் மேம்பட்டவர்கள்" என்று சொல்லுமவற்றுக்கு வேதாந்திகள் நிர்வஹிக்குங் கட்டளை மறக்கற்பாலதன்று.

14. மற்றவை கிடக்க: பிராட்டிக்கு ஆங்காங்கு ப்ரதிபந்நமாகிற சரணவரண கர்மீ பாவத்திற்கு எவ்வளவில் நோக்கென்று விமர்சிக்கில் 'எம்பெருமானுக்கு நாங்கள் ஆளாகும் படிநோக்கியருளவேணும் தாயே!' என்னுங் கோரிக்கையளவிலேதானென்று புலப்பட்டேதீரும். மோக்ஷ ரூபமான பலனை அவள் தானே நேரே தந்தருளுகிறாளென்று எங்கேனும் சொல்லி யிருந்தாலுங்கூட தாபயிதாக்களையும் தாதாக்களாகவே வைத்துப் புகழ்கிற கட்டளையிலே பொருந்தக் குறையில்லை. *ஞானங்கனிந்த நலங்கொண்டு* என்கிற நூற்றந்தாதிப்பாசுரத்தில் எம்பெருமானைப் போலே எம்பெருமானாரும் மோக்ஷப்ரதரென்று சொல்லி யிருப்பதோடு எம்பெருமானாருடைய மோக்ஷப்ரத்தவமே மிகச் சீரியதென்றும் வ்யக்தமாகச் சொல்லியுள்ளது. இதை எப்படி நிர்வஹிக்கிறோமென்பது சொல்லவேணுமோ? அதுவே கட்டளைதான் பிராட்டி திறத்தும்.

15. *வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே* என்கிற பாசுரம் பிராட்டியின் உபாயத்வத்தைச் சொல்லுகிறது என்பாரோடு நமக்கு யாதொரு பிணக்குமில்லை. *ஆயிரத்துளிப்பத்தும் அருவினை நீறு செய்யுமே* இவை பத்தும் கெடலில் வீடு செய்யும் கிளர்வார்க்கே* இப்பத்தும் வானின்மீதேற்றி யருள்செய்து *இப்பத்தும் மேலை வைகுந்தத்திருத்தும் *என்றிப்படியுள்ள பாசுரங்களையும் நோக்கலாமே. *வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே *என்றதைக் காட்டிலும் ஸுஸ்பஷ்டமாக ஒருபத்துப் பாசுரத்திற்கே மோக்ஷப்ரதத்வம் சொல்லப்பட்டிருக்கிறதே. அதுபகவத்ப்ரஸாதந த்வாரா என்றுகொண்டு ஸத்வாரகஸாதநத்வத்தை அங்கு நிர்வஹிக்கிற கணக்கிலே இங்கும் குறை யில்லையே. ஆகவே ப்ரஸாதயித்ருத்வம் தவிர வேறொன்றும் பிராட்டி பக்கல் புகாது.

16. ஸாரஸார ரஹஸ்ய த்வயாதிகாரத்தில்—"உபாயதசையிலும் உபேயதசையிலும் நாராயணன் கோலமலர்ப்பாவையோடு பிரிவற்றபடியைப் பூர்வோத்தரகண்டங்களில் மதுப்பு காட்டுகிறது" என்றருளினர் தேசிகன். இதில் யாதொரு விப்ரதிபத்தியுமில்லை. "ஆச்ரயணதசையோடு போகதசையோடு வாசியற ஒரு மிதுநமேயிறே உத்தேச்யம்" என்று ஈட்டிலுமுள்ளது. உபாயோபேயதசைகளிரண்டிலும் பிராட்டிக்குப் பிரிவு இல்லை—என்றதன் தாத்பரியத்தை அந்த இடத்திலேயே தேசிகனே விவரித்

தருளுகிறார்—“இந்த மதுப்பு அநேகார்த்தகமேயாகிலும் ஸம்ஸாரிகளுக்கு நினைத்த போதே நிச்சங்கமாக ச்ரியஃபதியினுடைய திருவடிகளைப் பற்றலாம்படியான உப யோகாதிசயத்தாலே இங்கே நித்யயோகத்தைச் சொல்லுகிறது.” என்று ஸ்பஷ்ட மாகவே ஸாதித்துள்ளார்.

17. எம்பெருமான் திருவடிகளில் சேதநர்களை நிச்சங்கமாகப் பற்றச் செய்வதா கிற புருஷகாரத்வத்திலே பிராட்டிக்கு உபயோகம் காட்டவே இந்த மதுப்பு உள்ள தென்று காட்டினாராயிற்று. இதுதானே ஸகலாசார்ய ஸூக்தி ஸர்வஸ்வம். ஸ்ரீவசநபூஷ ணத்தில் ப்ரபத்தியினுடைய தேசகால நியமராஹித்ய மருளிச் செய்யுமிடத்து “இவ் வர்த்தம் மந்த்ர ரத்நத்தில் ப்ரதம பதத்திலே ஸுஸ்பஷ்டம்” என்றதற்கு மணவாள மாமுனி களின்வியாக்கியானம்—(த்வயத்தில்) ப்ரதம பதத்திலே மதுபர்த்தமான புருஷகாரோ பாய நித்ய யோகத்துக்கு ப்ரயோஜநம் - ஏதேனுமொரு தேசத்திலே ஏதேனுமொரு காலத்திலே ஒரு ஸம்ஸாரி சேதநனுக்கு பகவத் ஸமாச்ரயணருசி விளைந்தால்..க்ஷணபங் குரையான ருசிதீருவதுக்கு முன்னே தத்தப்தக்ஷணத்திலேயே ஆச்ரயிக்கலா யிருக்கை யிறே.” என்று. ஆகவேபிராட்டியின் நித்ய யோகத்தை ஒருவரும் மறைத்திலர். * நேத்ருத்வம் நித்யயோகம் * என்றே அஷ்டச்லோகியும்.

18. ஸாரஸாரத்தில்-“உத்தரகண்டத்திற் போலன்றிக்கே பூர்வகண்டத்தில் பத்நீ ஸம்பந்தம் உபலக்ஷண மென்றும் குணவிக்ரஹ ஸம்பந்தம் விசேஷண மென்றும் பிரித்துச் சொல்லுவார்க்கு இதில் ஸ்வாரஸ்யமும் ப்ரமாண ஸம்ப்ரதாயங்களும் அநு குணமன்று” என்கிற ஸ்ரீ ஸூக்திகளுமுள்ளன, அவை யாரை நோக்கிப் பிறந்தவை யென்று பரிசீலிக்க வேணும். ரஹஸ்யத்ரயஸார-அபராத பரிஹாராதிகாரத்தில்—“ப்ரபந்நனுக்கு புத்திபூர்வோத்தராகம் லேபியா தென்று விசேஷித்துச் சொல்லுவ தொரு ப்ரமாண மின்றிக்கேயிருக்க, இவனுக்கு பின்பு புத்தி பூர்வாபராதம் பிறந் தாலும் க்ஷமைகொள்ள வேண்டா வென்றும், க்ஷமை கொள்ளாவிட்டாலும் சிக்ஷா ரூபதண்ட விசேஷமில்லை யென்றும்........சொல்லுகிற பக்ஷங்கள் சரண்யனுடைய குணங்களையும் சரணாகதியினுடைய ப்ரபாவத்தையும் சொல்லுகைக்காக வத்தனை.” என்று ஸாதித்திருப்பதும், மேலே ஸாத்யோபாய சோதநாதிகாரத்திலே-“ப்ரபத்தி யும் ஒரு வைதிக தர்மமாகையாலே யாக விசேஷமான விது ஸர்வாதிகாரமாகக் கூடுமோ வென்று சிலர் சங்கிப்பர்கள்—அது பரிஹ்ருதம்” என்று ஸாதித்திருப்பதும் இங்ஙனே மற்றும் பல பணித்திருப்பதும் யாரை நோக்கியதோ, அவர்களோ தத்ஸஜாதீயர்களோ உபலக்ஷணத்வ விசேஷணத்வ விவாதத்திற்கும் விஷய பூதர்களென்று கொள்க.

19. இங்கே, உபலக்ஷணத்வமாவது என்ன? விசேஷணத்வமாவது என்ன? என்பதைச் சிறிது விசாரிப்போம்.

क्रियान्वयित्वे सति व्यावर्तकत्वम् उपलक्षणत्वम् ; क्रियानन्वयित्वे सति व्यावर्तकत्वं विशेषणत्वम्

என்று சிலர் சொல்லுவர். இப்படிலக்ஷணசிக்ஷபண்ணியிருப்பதை நாம் சாஸ்த்ரங்களில் காண்கின்றிலோம்.

विद्यमानं सत् व्यावर्तकं विशेषणम् ; अविद्यमानं सत् व्यावर्तकम् उपलक्षणम्

என்றே வ்யுத்பத்திவாதத்தில் நிரூபிக்கப்பட்டுள்ளது.

विशेष्यान्तर्गतत्वे सति विशेष्यप्रतिपत्तिहेतुत्वं विशेषणत्वम् ;

विशेष्यानन्तर्गतत्वे सति विशेष्यप्रतिपत्तिहेतुत्वम् उपलक्षणत्वम् ।

என்றுமுண்டு. ஸ்ரீ பாஷ்யாதி பரிசீலநம் பண்ணினாலும் இவ்வளவே தேறுகின்றது. இந்தரீதியில் பார்த்தால் த்வயத்திலும் மற்றும் எவ்விடத்திலும் பிராட்டிக்கு விசேஷ ணத்வம் தவிர உபலக்ஷணத்வத்தைக் கொள்வது ஒரு ஆசார்யர்க்கும் உடன்பாடன்று.

20. ரஹஸ்யத்ரயஸாரத்தையே கொள்வோம். அதில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில்—"ஸ்ரீமச்சப்தத்திலே சொல்லுகிற பத்நீஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்குப் பரிஹாரம் காட்டுகிறோம். சிலர் த்வயத்தில் பூர்வ கண்டத்தில் ஸ்ரீமச்சப்தம் உபலக்ஷண பரமென்றும் உத்தரகண்டத்தில் ஸ்ரீமச்சப்தம் விசேஷணபரமென்றும் பிரியச் சொன்னார்கள்" என்று தொடங்கியுள்ள ஸ்ரீஸூக்திகளில் பலர் மயங்கிநிற்பர்கள். அங்கும் ஸ்வாமி கண்டிப்பதெல்லாம் பிராட்டிக்கு நித்யயோகத்தை யிசையாதாரைப் பற்றியே யென்பதுஸ்பஷ்டமே. எங்ஙனேயென்னில்; "பூர்வகண்டத்தில் விசேஷணத்வமில்லை யென்னில், உத்தரகண்டத்திலும் அது இல்லையாக ப்ரஸங்கிக்கும்" என்றார்: உடனே "ஆனால் இரண்டிடத்திலும் உபலக்ஷணமானாலோ வென்னில்" என்று கேட்டுக்கொண்டு "குணவிக்ரஹவ்யாபார விசேஷங்களும் இரண்டிடத்திலும் உபலக்ஷணங்களாக ப்ரஸங்கிக்கும்" என்றார். அதன்மேல் "உபயுக்தங்களாகையாலே அவை விசேஷணங்களென்னில்; இது பூர்வோத்தர கண்டங்களில் பத்நீஸம்பந்தத்திலும் துல்யம். உபயோக விசேஷங்கள் தத்தத்வஸ்துக்களுக்கு அநுரூபமானபடியிலே ப்ரமாணஸம்ப்ரதாயங்களாலே கண்டுகொள்வது. வஸ்த்வநுரூபமாயிறே உபயோகமிருப்பது. உபாயோபேய பரமான வாக்ய த்வயத்திலும் ச்ருதமான இவ்விசேஷணத்தினுடைய உபயோக ப்ரகாரத்தை *வேரி மாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்கும்* என்றும் *நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு நின் கோயில் சீய்த்து* என்றும் நம்மாழ்வார் அருளிச்செய்தார்" என்றும் ஸாதித்துள்ளார். இதைக்கண்டபின்புமா கலக்கம்? ஸ்ரீவசநபூஷணாதிகளில் வடிக்கட்டின அர்த்தமன்றோ இது.

21. இங்ஙனமே த்வயாதிகாரத்திலும்—"இங்கு பிராட்டியை விசேஷித்தெடுக்கையாலே நாரசப்தார்த்தங்களான வஸ்த்வந்தரங்களிற் காட்டில் வ்யாவ்ருத்தியும், விசேஷணமாக நிர்த்தேசிக்கையாலே யதாப்ரமாணம் பதிபாரார்த்தியமும் ஸூசிதம்" என்றும்; "இங்கு மதுப்பு உபயோக விசேஷத்தாலே ப்ரமாணஸித்தமான நித்யயோகத்தைச் சொல்லுகிறது" என்று முள்ளது. இவற்றால் என்ன தேறிற்று? பூர்வகண்டத்திலும் பிராட்டியின் தன்மைக்குத் தக்கபடி அவளுக்கும் ஒரு உபயோகமுண்டு; அதற்காக அவளுடைய யோகத்தையும் கொண்டேயாகவேணும் என்று ஸாதித்திருக்குமிதனால் 'புருஷகாரத்திற்காகப் பிராட்டியைப் பற்றியேயாகவேண்டும்' என்று தாமே பதேபதே கூறியிருக்குமதுவே தேறி நின்றது.

22. ஸாராஸ்வாதிநியிலும்—"உபயோக விசேஷமாவது—ஸாபராதரான சேதநர்கள் எந்த ஸமயத்திலும் கூசாமல் ஆச்ரயிக்கலாம்படி கண்ணழிவற்ற புருஷகாரமாகை" என்று விவரிக்கப்பட்டது. இதில் யார்க்கு என்ன விப்ரதிபத்தி? முந்துற முன்னம் நாம் எடுத்துக்காட்டியுள்ள பட்டர்ஸ்ரீஸூக்தியிலும் *நித்யாநபாயாம்ச்ரியம் ஸம்ச்ரித்ய* என்றுள்ளதுதானே. அதை இல்லைசெய்யும் சிலரை நோக்கியன்றோ ப்ரத்யாக்க்யாநஸம்ப்ரமம் கொண்டதாக விளங்குகின்றது. ஸித்தோபாய சோதநாதிகாரத்தின் முடிவில் *ஸ்வப்ராப்தேஸ் ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ *என்று பேரீபடஹ கோஷணம் செய்தருளாநின்ற ஸ்வாமியின் திருவுள்ள நிலையையறியாதே பேசுவார்க்கு நாம் என்சொல்லுவது? ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் *இயம் கேவல லக்ஷ்மீசோபாயதவப்ரத்ய யாத்மிகா* என்ற தொன்றுகொண்டே தெளியலாமே. லக்ஷ்மிததிசோபாயத்வப்ரத்யய* என்றால் ச்லோகம் கூடாமை யில்லையே. ஏன் அப்படி சொல்லவில்லை?

23. ஈதொன்றை அவஹிதராய்க் கேளீர். நாம் விசிஷ்டாத்வைதிகள். சேதநாசேதநங்கள் எப்போதும் எம்பெருமானுக்கு விசேஷணங்களா யிருக்கின்றன வென்று சொல்லுகிறோமேயன்றி உபலக்ஷணவாதம் செய்கின்றிலோம். எம்பெருமான் செய்கிற காரியங்களிலே அந்த விசேஷணங்களுக்கு எவ்வளவு அந்வய மென்பதை விமர்சிக்கலாகாதோ? ஸாராஸ்வாதிநீகாரர் *ஸாமாத்யோ ராஜா வததி *என்று தொடங்கி

ஸாவதாபி அப்ரஸக்தமான ஒரு வார்த்தையை எழுதி வைத்திருக்கிருரே, அந்த வாக்கியத்தையே யெடுத்துக் கொள்வோம். அமாத்ய விசிஷ்டனுன அரசன் பேசுகிறானென்ருல், அரசன் பேசுங்காலத்தில் மந்திரி கூட ஸாக்ஷியாக இருந்தானென்னு மிவ்வளவு தோன்றுமேயல்லது ராஜாசொன்ன வார்த்தைகளை மந்திரியும் கூடவே சொன்னுனென்றுகூட தோன்றிவிடுமோ ? இங்கு அமாத்யனுக்கு விசேஷணத்வமேயல்லது உபலக்ஷணதவமில்லையே. அப்படிப்பட்ட விசேஷணத்வத்தைப் பிராட்டிக்கு இல்லை செய்வாரார் ? ஆகவே ' வைசிஷ்ட்யத்தை சரணத்வித்வங் கொண்டு பாதிக்கலாகாது ' என்பதானது ' वृषभप्रसूतं वत्सं माबधान; बलीवर्द्दुग्धं मा पिब ' என்பவற்றோடாமத்தனை,

24—" श्री: श्रीमन्नारायणं शरणं प्रपेदे " என்று ஒருவர் சொன்னுல் இதை அபப்ரயோகமென்ன முடியாது. ஸ்ரீயானவள் ஸ்ரீயையும் நாராயணனையும் சரணம் புகுந்தாளென்று இதற்கு அர்த்தமாய் விடுமோ ?... ..இவ்விஷயத்தில் இன்னமும் சொல்லவேண்டுமவற்றை ஹ்ருத்தாபநாசினி நிரம்பச் சாயம் கக்க வேண்டிய ஸமயம் அணித்தாயிருக்கையாலே அப்போது சொல்லுவோம் ஸ்ரீதத்வசோதநமும் ஸம்ஸ்க்ருதத்தில் வருகிறது.

## ஸங்கீர்ண விஷய ஸமாலோசநா

25. பஷணகாரர் (பக்கம் 12-ல்) "தென்கலை ஸம்ப்ரதாயத்தில் முதன்மையாய் தேசிக க்ரந்தத்வேஷிகளில் அக்ரகண்யராயிருந்த திருப்பதி அனந்தாண் பிள்ளை புரிசை ஸ்ரீ ஸ்ரீ ரங்காசார்யர்." என்று எழுதுகிருர். ப்ரக்ருதத்தில் இவர் அந்த மஹா ஸ்வாமியை தனக்கு ப்ராசார்யராக வெளியிட்டுக் கொள்ளுகையாலே அந்த ஸ்வாமியின் ப்ரஸ்தாவம் வந்தது யுக்தம். அந்த ஸ்வாமிக்கு இவர் இட்டிருக்கிற இரண்டு விசேஷணங்கள் இப்போது எதற்காக? என்று கேட்டால் 'துராக்ரஹங் தூண்ட எழுதினேனத்தனை' என்றல்லது வேருென்றும் சொல்லகில்லாரிவர். சொல்லவல்லரேல் சொல்லுக.

26. ஸ்ரீ வைகுண்ட கத்யத்தில் * உத்தாயோத்தாய புநஃ புநஃ ப்ரணம்ய * என்றிருப்பதை அஸ்தானே யெடுத்துக் காட்டுகின்றவிவர் நம்முடைய நமஸ்காரதத்வ, தத்விஜய க்ரந்தங்களை ஸேவித்திலர். ஸ்ரீ வைகுண்டத்தில் ஒரேயிடத்தில் நின்றுகொண்டு விழுந்து விழுந்து எழுந்திருக்கையை யருளிச் செய்தபடியன்று. கீழே * தூராத் தேவ என்றிருக்கையாலே நெடுந் தூரத்தில் நின்றும் காலால் நடந்து செல்லாதே ப்ரணமபரம்பரைகளினுலேயே செல்லுகிறபடியைச் சொல்லிற்று. ஸ்வாமி திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளி நம்பிதிருமாளிகை எங்கே யென்று கேட்டறிந்தவிடத்தில் நின்றும் நம்பி திருமாளிகை யளவும் நமஸ்கார பரம்பரையினுலேயே யெழுந்தருளினுப்போலே.

27. இப்படித்தானென்று நிச்சயிக்கைக்கு நியாமக முண்டோ வென்னில்; ஏனில்லை, தாராளமாகவுண்டு. ஸ்ரீ வைகுண்டத்தில் அப்படியாக அருளிச் செய்தவர் தாமே இந் நிலத்துச் செய்தி விசேஷங்களைச் சொல்லுகிற நித்யக்கிரந்தத்திலே— " आराधनाभिमुखो भवेति प्रार्थ्य मूलमन्त्रेण दण्डवत्प्रणम्य उत्थाय स्वागतं निवेद्य." என்று [தண்டவத் ப்ரணம்ய உத்தாய] என்றிவ்வளவே அருளிச் செய்திருப்பது காண்க. இதுபோதுமே

28. *நமோ நமோ வாங்மநஸாதி பூமயே* என்றவிடத்து நம் தேசிக பாஷ்யத்தில் "ப்ரசம்ஸாயாம் ப்ரதிஜ்ஞாயாம் ப்ரலாபே தர்ஜநேபிச, பயேச விஜயே சைவ பௌநபுந்ய மலங்க்ருதிஃ" என்று சொல்லி மருமத்தை வெளியிட்டார். பாம்பு பாம்பு பாம்பு என்று எத்தனை தடவை சொன்னுலும் ஒரு பாம்பே யொழிய, சொல்லிலுள்ள பஹுத்வத்திற்காக பாம்பிலும் பஹுத்வம் வந்திடா தென்று நன்கு காட்டிவைத்தாரே.

29. *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்றவிடத்து தேபூயிஷ்டாமென்று அந்வயித்து நமஉக்திமாத்ரமும் எம்பெருமானுக்குக் கனத்துத் தோற்றுகிறதென்று உரைத்தால் * கைகளாலாரத் தொழுது தொழுது * என்பது முதலான பாசுரங்களுக்குக்

கதியென்! என்பார்க்குச் சொல்லுகிறோம். * தொழுதுமாமலர் நீர்சுடர்தூபங்கொண்டு எழுதுமென்னுமிதுமிகை * என்று ஒரு பக்கத்திலும் *பூவில்புகையும் விளக்கும் சாந்தமும் நீரும்மலிந்துமேவித்தொழுமடியார் * என்று மற்றொருபக்கத்திலு மருளிச்செய்கிறார். * சிற்றவேண்டா சிந்திப்பேயமையுங் கண்டீர்கள் * என்று ஒருபக்கத்திலும், * எம்மானைச் சொல்லிப் பாடியெழுந்தும் பறந்தும் துள்ளாதார் தம்மால் கருமமென் சொல்லீர் * என்று மற்றொரு பக்கத்திலுமருளிச் செய்கிறார். * அவன் நாடுநகரமும் நன்குடன் காண நலனிடையூர்திபண்ணி......மூவுலகுக்குந்தரும் ஒருநாயகமே * என்று முன்பாட்டிலும், *ஒரு நாயகமாயோட வுலகுடனுண்டவர் கருநாய்கவர்ந்தகாலர்* என்று அடுத்தபாட்டிலு மருளிச்செய்கிறார், * மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே * என்று முன்பாட்டிலும் * கொண்ட பெண்டிர் மக்களுற்றார்......காதல்மற்றி யாதுமில்லை * என்று அடுத்தபாட்டிலு மருளிச்செய்கிறார். வடமொழி வேதத்திற் சென்றாலும் * अमुमेव लोकं गच्छति * என்றும் * को हि तद्वेव यदमुष्मिन् लोकेऽस्ति वा न वेति * என்றும் ஓதிக்கிடக்கிறது. இவையொன்றும் அஸம்பத்தப்ரலாபமன்று. எல்லாவற்றையுமினிதாகப் பொருந்தவைத்து உபதேசம் தருவோம் அடைவிலேவந்து கேட்கில்

30. ஒரு மஹாகவி *ஏகோ ஹி தோஷா குணஸந்நிபாதே நிமஜ்ஜதீந்தோ: கிரணேஷ்விவாங்க:* என்று ஒரு காவியத்திலும் *மலிநமபி ஹிமாம்சோர் லக்ஷ்ம லக்ஷ்மீம் தநோதி* என்று [அதற்கு எதிராக] மற்றொன்றிலும் சொல்லிவைத்தான். இப்படிப் பட்ட விடங்களில் சங்கையே உதிக்கப்பெறாமலும் உதித்தாலும் தெளிவுபெற முடியாமலும் கிடக்கின்றவர்கள் ஸதாசார்ய ஸந்நிதியிலே போந்து நூலடைவே சிஷ்யவ்ருத்தி பண்ணித் தெளியவன்றோ அடுப்பது. எம்பெருமானை அவ்யாஜோதாரன் என்று கொண்டாடுகிற தேசிகாதிகளே அல்பவ்யாஜஸாபேக்ஷனென்றும் சொலலிவைத்தவிடங்களைப் பொருந்தவைக்கவேண்டிய பொறுப்பு யாவர்க்குமுள்ளது.

31. * பெருமாளீள்படைத் திருவாய்மொழிக்குப்பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தையே தழுவி அவ்யாஜோதார பாவத்தை ப்ரமேயமாக அருளிச் செய்கிறார். அவ்யாஜாக்ஷகத்வவாதமும் வ்யாஜஸாபேக்ஷ ரக்ஷகத்வவாதமும் ஒன்றன்றே. பரஸ்பர விருத்தந்தானே. இதை எப்படி ஸமந்வயப் படுத்துகிறீர்களென்று கேட்டால் * திசோ தச விலோகயந் * என்ற நிலையாகிறதோ வேறு நிலைதானாகிறதோ பார்ப்போம்.

32. (ப்ரபத்தி உபாயம்) என்றும் (ப்ரபத்தியே உபாயம்) என்றும் பல்லாயிரமுறை பகர்ந்தாலும் அதற்குப் பொருள் இவ்வளவே—* சரணாகதியென்னும் சார்வுடன் மற்றொன்றை யரணாகக் கொள்ளாதார் * என்று தேசிகன்பணித்தபடியே இதரோபாயங்களை விட்டுத் தொலைத்து இதுவே நமக்குத் தஞ்சமென்று துணிந்திருக்கையாம். ஸித்தோபாயமென்றும் ஸாத்யோபாய மென்றும் இரண்டே உபாயசப்தவாச்யமுள்ளது. ஸித்தோபாயம் எம்பெருமானேயென்று அவிசால்யமாக வுள்ளது. சரணாகதியோ சேதநக்ருதி ஸாத்ய மன்றாகையாலே ஸாத்யோபாய மன்றென்று முடிந்தது. ஸாரே மூலமந்த்ராதிகாரத்தில் அகாரார்த்தமான எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தை நிரூபித்து வருகையில், ரக்ஷணத்திற்கு ஹேதுநிர்தேசம் பண்ணுமையாலே ரக்ஷகத்வம் நிருபாதிகமென்று சொல்லி, ஆனாலும் " ஸாபராதரான ஸம்ஸாரிகளுக்கு மோக்ஷாதிப்ரதாநத்தில் ஸ்வதந்த்ரனான வீச்வரன் தான் ஸங்கல்பித்துவைத்ததொரு வ்யாஜத்தையபேக்ஷித்திருக்கும்" என்று சொல்லி, அதற்குமேல் பணித்துள்ளதைப் பாரீர்;— " இப்படி ஸ்வாபாவிகமானரக்ஷகத்வம் ப்ராதிகூல்யம் நடக்குங்காலத்தில் அநாத்யபராதத்தாலே பிறந்த நிக்ரஹரூபஉபாதியாலே. ப்ரதிபத்தமாம். ப்ரதிபந்தகமான இவ்வுபாதியைக் கழிக்கைக்காகவே ப்ரபத்திமுதலான வ்யாஜங்கள் சாஸ்த்ரஸித்தங்கள்" என்றார். இதை ஸம்ஸ்க்ருதசப்தத்தாலே வ்யயவஹரித்தால் " பகவத்ப்ர

வ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திః ப்ரபத்திః" என்றல்லது வேறுகச் சொல்ல முடியாது. உடனே காரிகையு மிடுகிறுர் காண்மின்—*த்ராணே ஸ்வாமித்வ மௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிணః, ப்ரதாநஹேதுః ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணு விபோः* என்று. இதைவிடத் தெளிவாக ஒருவராலு மருளிச்செய்ய முடியாது. எம்பெருமானுடைய ஸ்வதந்த்ர கருணைதான் உபாயம், சரணுகதியானது வ்யாஜமாத்ரமான ஸஹகாரி யாகிறது. என்றவிதில் யாரும் விவாதப்படுவாரில்லை.

33. * இயம்கேவல லக்ஷ்மீச காரிகையில் பண்ணுகிற விகல்பமெல்லாம் சாஸ்த்ரஜ்ஞ கோஷ்டியிலே காசுக்குமுதவாத நிரர்த்தகவாக்ஜால மத்தனை. அங்கு இயம் என்கிற முதல் பதத்திஞல் விவக்ஷிதமான வஸ்து எது? ஸஹகாரிணும் என்ற முடிவு பதத்திஞல் விவக்ஷிதங்களான வஸ்துக்கள் எவை? மேலே யெடுத்துக் காட்டிய * ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிணः * என்ற ஸாரகாரிகையிஞல் ந்யாஸம் ஸஹகாரியென்று முடிந்ததாகில் இயம்பதார்த்த வஸ்து வேறு எது? இத்யாத்யநேக சோத்யங்களைச் செய்துகொண்டும் போதைப் போக்கலாம். "உங்கள் வம்சமே அநாசாரபுஞ்ஜம்" என்று ஒருவர் சொல்ல, அவரை நோக்கி விகல்பித்தாராம்—என் தகப்பஞர் அநாசார மென்கிறுயா? பிதாமஹர் அநாசார மென்கிறுயா? ப்ரபிதாமஹர் அநாசார மென் கிறுயா? கூடஸ்தர் அநாசாரமென்கிறுயா? என்று. இதற்கு அவர் சொன்னர் 'எல்லாருமே அநாசாரமென்கிறேன்' என்று. அதற்குமேல் சொன்ஞர்—என் பித்ருபிதாமஹாதிகளை நீ கண்டவனல்லாமையாலே அவர்களுடைய அநாசாரத்தை நீ சொல்லத்தகாது; நான் மத்யபாந மாம்ஸபக்ஷணுதிகளில் குறையற்றிருக்கிறேனுகை யாலே என்னநாசாரம் ஸாதிக்க முடியாது. ஆகவே பக்நோஸி இதி. அவ்வளவோடு வாதம் முடங்கிட்டதாம். இவ்விதமாகவே இவரும் விகல்பித்து வெற்றி பெற்ற தென்னத் தட்டில்லை.

34. பிள்ளைபாக்க மழகியசிங்கர் *ந்யாயஸித்தாஞ்ஜநகந்த க்ராபணமென்றெரு வ்யாஸ மெழுதியிருக்கிறுராம். ஆஞல் அந்த க்ரந்த கந்தமும் நம்மாலே ஆக்ராதமாக இராதாம்: இதை (பக்கம் 5-ல்) எழுதுகிறுர். பரம ஸந்தோஷம்.. அது பெரிய க்ரந்தமன்றே, ஒரு வ்யாஸந்தானே. அதை இதுவரையில் ந்ருஸிம்ஹப்ரியாவில் பன்முறையும் ப்ரசுரித் திருக்கலாமே. பெரிய க்ரந்தமாயிருந்தாலுங்கூட மாலோல நிலயத்தில் பிரசுரிக்க என்ன அருமை? பாமரர்களுக்கும் பயன்படாத அபத்த க்ரந்திகளை விட்டு அப்படிப் பட்ட மஹான்களின் உத்தம ஸூக்திகளை வெளியிட்டால் உலகுக்கு எவ்வளவு உபகார மாகும். அதன் முத்ரணவ்யயத்தை நாம் பொறுத்துக்கொள்ளவும் தடையில்லை. கடலுக்குத் தண்ணீர் வார்க்கிறேனென்பதுபோலே இது பரிஹாஸ்யமான பேச்சாயி னும் அந்த அழகியசிங்கரின் வியாஸம் அவசியம் விரைவில் வெளிவந்து வித்வான் களை உகப்பிக்கவேணுமென்கிற உத்கடேச்சையிஞல் இது தெரிவித்தபடி. ரத்ந பேடிகையில் இல்லாத ரத்னம் அதில் அவச்யமிருக்குமே. அதை வித்வத்ரத்நங்கள் அநுபவிக்கவேண்டாவா? அந்த க்ரந்தத்தை ஆக்ராணம் பண்ணவும் நமக்கு சக்தி யில்லையென்று இவரால் எழுதப்படவில்லை; "அந்த க்ரந்த கந்தமும் இவராலே ஆக்ராதமாக இராது" என்றே யெழுதி யிருக்கிறுர். ஆக்ராணமன்றிக்கே பரிபூர்ணுநு பவமே பண்ணிவைத்தருளலாமே யென்று ப்ரார்த்திக்கிறேன். அவ்வழகிய சிங்கரின் வ்யாஸம் உண்மையாயும் நவீநர்களுக்கு அபிமதமான அர்த்தத்தை ஸ்தாபிக்கவல்ல தாயு மிருக்குமாகில் அதை வெளியிட்டாகவேண்டியது அவசியம்; அத்யாவச்யகம். இதைப்பற்றின மேல் வார்த்தைகள் அதன் பிறகே. அது வெளிவராமல் பக்ஷண சேஷங்களை வெளிவந்து கொண்டிருக்குமாயின், அலம் சவசரீரோத்வர்த்தநேந என்று நிற்போம். மற்ற விஷயங்களைப்பற்றின உத்தரங்கள் க்ரமேண வெளிவரும்.

——:o:——

ஸ்ரீ:

# வித்வான்களுக்கு விண்ணப்பம்.

---

ஸமீபத்தில் நாம் வெளியிட்ட சாஸ்த்ராநுபந்த ஸமீபக்ஷயில் "இற்றைக்குப் பத்தா நாளில் ஸ்ரீ தத்வ சோதந மென்கிற ஸம்ஸ்க்ருத நூலை வெளியிட்டு அதனால் பிராட்டி விஷயமான ஸகலதத்துவங்களையும் உணர்த்தப் போகிறோம்" என்று வெளியிட்டிருந்தேன். க்ருஷ்ணா தீரத்திலும் கோதாவரீ தீரத்திலும் நடந்த சில பண்டித பரிஷத்துக்களுக்குச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் அசிந்திதமாக நேர்ந்ததனால் அந்த ஸ்ரீ தத்வ சோதனம் ஸித்தமாவதற்குச் சிறிது தாமதமாயிற்று. ஆனாலும் பெரும்பாலும் ஸித்தமாய்விட்டது. அது ஸம்ஸ்க்ருத க்ரந்தமாதலால் தேவ நாகராக்ஷரத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. அடுத்த வாரத்தில் அது வெளிவந்து வித்வான்களை ஹர்ஷப்ரகர்ஷ பரவசராக்கும். அது மாத்திரமேயன்று; மற்றுங் கேண்மின்.

தத்வ பாஷணமென்கிற மடத்துப் பண்டிதருடைய வியஸாத்திலும் தத்ஸஜாதீயர்களது வியாஸங்களிலும் வாத்ஸல்யம், தயா என்பவற்றைப் பற்றின பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திதூஷணங்களும், அந்த ஸ்ரீஸூக்திகளின் உண்மைப் பொருள்களைச் சிறிது முணராமல் அபார்த்த லேகனங்களும் காண்பதால் எல்லாவற்றுக்கும் ஸமூலோந்மூலனமாக நம்மால் ஸம்ஸ்க்ருதத்திலேயே யெழுதப்பட்டுள்ள வாத்ஸல்ய தயாதத்வ விவரண க்ரந்தங்களும் (தமிழுரையோடுங் கூட) ஸித்தமாகி நிருக்கின்றன. அவையும் ஸ்ரீ தத்வ சோதநத்தோடு சேர்ந்து அடுத்த வாரத்தில் அவசியம் வெளிவரும். அவை யெல்லாம் நமது சாஸ்த்ரார்த்த சந்திரிகையின் மலர்களேயாகும். நமது பூர்வாசார்யர்கள் நிஷ்கர்ஷித்தருளின ஸகலார்த்தங்களும் பிறருடைய அவத்ய பாஷணங்களுக்கு அணுவளவும் ஆஸ்பதமாகாதபடி அவற்றை ஸமஞ்ஜஸமான முறையில் ப்ரதிஷ்டாபநம் செய்வதொன்றே அடியேனுடைய ஜன்ம ப்ரயோஜனமாதலாலும், இவ்வுலகில் அடியேன் ஜீவித்திருக்குமளவும் இந்தத் தொண்டு அவர்ஜநீயமாதலாலும், சாஸ்த்ரார்த்த சந்திரிகையின் உதயம் ஸபலமாக வேண்டியிருப்பதாலும் ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்கள் அபிநிவேசத்துடன் எதிர்பார்க்கும் ஸதுத்தரங்கள் யாவும் க்ரமேண வெளிவந்துகொண்டே யிருக்கும்.

பெரும்பாலும் சாஸ்த்ரீய விஷயங்களாதலால் ஸம்ஸ்க்ருத பாஷையிலேயே யெழுதி வெளியிடவேண்டுமென்று குதூஹலித்துக் காரியம் நடந்து வருகிறது. அதனால் தமிழ்ப் பாஷையில் வெளிவராது நின்றுவிடுமோவென்று ஒருவரும் தளர வேண்டா. உபய வேதாந்திகளுக்கும் ஒருங்கே உதவிசெய்தே வருவோம். அம்ருதலஹரீ பத்ரிகையையும் க்ரமேண ப்ரசுரம் செய்துவரத் தொடங்கியாயிற்று.

எதிர்த்தலையில் எவ்விதமான தூஷணங்கள் வெளிவந்தாலும் அதைக் காண்பவர்கள் சிறிதும் தளரவேண்டா. "அருணோதயத்தில் விவாஹம், ஸூர்யோதயத்தில் வைதவ்யம்" என்கிற கதையாய் நவீன சுஷ்கவாக்ஜால ப்ரபஞ்சனங்களெல்லாம் ஸத்யஸ் ஸத்யஸ் ஸம்ஹ்ருதமானவையே யென்று யாவரும் அறுதியிட்டு நமக்கு எழுதிக் கொள்க.

இங்ஙனம் :

ஸ்ரீவைஷ்ணவதாஸன்,

**ப்ர. அண்ணங்கராசார்ய தாஸன்.**

**5-2-1952**